# இந்தப் புதிய "குறைவான-பிரஷர்" டயர்களுடன்



# உங்கள் காரைக் கண்டு குதூகல மடைவீர்கள்

உங்கள் காரின் உழைப்புக்கு புதிய ஸூபர் - குஷன் டயர்கள் வெகு பிரமாதம்!

ஏனென்ருல், அவை பெரியவை, மிருதுவானவை; அதிக அளவு காற்று பிடிக்கும். இருந்தாலும் 24 பவுண்டு பிரஷர்தான்.

உங்கள் கார் — புதியதோ பழயதோ — போட்டுப் பாருங்கள். சவாரி வெகு விசித்திரமாக இருக்கும்.

- எவ்வித ரஸ்தாவிலும் மென்மையாகவும் மிருதுவாகவும் போகும்
- அதிகப் பாதுகாப்புடன் அதிக பளு இழுக்கும் சக்தி
- உங்கள் காருக்கு மிகவும் குறைந்த தேய்மானம்
- அதிக சப்தமின்மை பழுதுச் செலவும் குறைவு
- அதிக மைல்கள் மேலும் சிக்கனம்
- மிகவும் அழுத்தம் வாய்ந்தது

**The new *SuperCushion***

**by GOODYEAR**

உலகமெங்கும் ஏராளமான ஜனங்கள் வேறெதையும்விட குட்இயர் டயர்களையே உபயோகிக்கின்றனர்

... AFTER THAT I'M CONVINCED

*Tussanol*

IS THE

ONLY WAY



பரீட்சைகள் செய்வது நேரத்துக்கும் பணத்துக்கும் வீண் செலவுதான். எப்போதுமே நிச்சயமாக குணத்தை யளிக்கும் "டஸ்ஸனல்" உபயோகித்து ஜலதோஷம் இருமலினின்றும் மிக எளிதில் சௌகரியமடைந்த அநேகம் பேர்களின் புத்திமதியையே நீங்களும் மேற்கொள்ளுங்கள்.




# TUSSANOL

*for* COUGHS

MARTIN & HARRIS LTD., CALCUTTA

# நாகரீக பால் பண்ணை

மக்களின் ஆரோக்கியத்திற்கு, சுத்தமான புதிய பால் இன்றியமையாதது. ஆகையினால், பண்ணைக்கட்டிடங்கள் சுத்தமாகவும், நீர்க்கசிவு இல்லாமலும், சுகாதாரத்திற்கு உகந்ததாயும் இருக்கவேண்டும். அதற்கு சிமெண்ட் கான்கிரீட்டை விட வேறு எந்தப் பொருளால்தான் ஈரம், தூசி, முதலியவை இல்லாமல் கால்நடைகள்நலத்தைக்காக்க முடியும்?

கான்கிரீட் பரப்பு மிருது வழவழப்பைக் கொடுக்கிறது. அதில் கிருமிகள் தங்குவதற்கு வெடிப்புகள் கிடையாது. ஓதத்தினால் துர்நாற்றமும் ஏற்படுவதில்லை. கான்கிரீட்டின் ஆரம்ப செலவு குறைந்ததானபோதிலும் அக்கட்டிடங்கள் நிரந்திரமாக இருப்பதுடன் மதிப்பு மிக்க தோற்றத்தையும் அளிக்கின்றன. மேலும், வசதியும் ஆரோக்கியமும் உள்ள பண்ணை, அதிகமான, முதல் ரக பாலீட்டுகளின் மூலம், மிகுந்த நன்மைக்கு ஏதுவாகிற தென்பதையும் கவனியுங்கள்.

மற்ற விவரங்களுக்குக் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள் :— தி கான்கிரீட் அஸோஸியேஷன் ஆப் இந்தியா, 9 மவுண்ட ரோடு, மதராஸ்.



தி ஸிமெண்ட் மார்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா லி.
டிஸ்டரிபூடேர்ஸ் பொர
தி அஸோஸியேடெட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லி.

CMI 814 ADTS. TAMIL

# அதிகப்படியான மைல்கள்

# Firestone

## *De Luxe* CHAMPION TYRES

## பயர்ஸ்டோன்

### டிலக்ஸ் சாம்பியன் டயர்களினால்

இரண்டு அடுக்குகள் அதிகமான கம்-டிப்பிடு கயிறு பிணைப்புகள் கொண்டவை.

அகலமான அழுத்தமான விடாமிக் ரப்பருடன் விசேஷ முறையில் சேர்த்து செய்யப்பட்ட வரம்புகளுடன் கூடியவை.




**இன்று சிறந்தது - நாளை இன்னும் சிரேஷ்டமானது**

# புதிய இரு சிறந்த
# வாக்ஸால் கார்கள்




வெலாக்ஸ் 6 - (18-H. P.) குறைந்த பெட்ரோல் செலவில் சிறந்த உழைப்பு. மணிக்கு 75 மைல் வேகம். பெட்ரோல் காலன் ஒன்றுக்கு 25 முதல் 28 மைல்கள் வரை போதும்.




வைவர்ன் 4 (12 H. P.) மிகச் சிக்கனமுள்ள உயர்தர வண்டி. மணிக்கு 64 மைல் வேகம். பெட்ரோல் காலன் ஒன்றுக்கு 33 முதல் 35 மைல்கள் வரை போதும்.

தென்னிந்தியாவுக்கு விற்பனை உரிமையாளர்கள்:

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் லிமிடெட்,**

மதுரை, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, புதுக்கோட்டை.

---

**சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்,**

மவுண்ட் ரோடு, சென்னை.

TVBZ-6TM

மே 28உ முதல்

தமிழ்நாட்டில் எல்லா
முக்கிய நகரங்களிலும்
வெளிவருகிறது



ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பிலிம் கம்பெனியின்

# நவஜீவனம்

தமிழ்

நித்திய வாழ்க்கையில் நிகழும் விந்தைகளை நினைவுறுத்தும் சித்திரம்

நாகய்யா • கண்ணாம்பா • வரலக்ஷ்மி • ஸ்ரீராமன்

டி.ஏ.ஜயலக்ஷ்மி • டி.ஆர்.ராமச்சந்திரன் • எம்.நாராயண ராவ் நடித்தது

டைரக்ஷன்: கே.பி.நாகபூஷணம் • ஸ்டுடியோ ஜெமினி

வசனம்: "உதயகுமார்" சங்கீதம்: எஸ்.வி.வெங்கடராமன்





# கல்கி பொருளடக்கம்



மலர் 8 | இதழ் 43 | மே 22 | விரோதி ௵ வைகாசி 9உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.



மலர் 8 } தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 43

# என்ன சேதி?

## தாமதம் கூடாது

"திருவாங்கூர் தமிழர்களின் கோரிக்கைக்குத் தமிழ்நாட்டு மக்களின் ஏகோபித்த ஆதரவு இருந்து வருகிறது. தமிழ்நாட்டுத் தலைவர்களும் அவ்விஷயத்தில் அக்கரை கொள்ள வேண்டும். அது இந்திய சர்க்காரையும் திருவாங்கூர் சர்க்காரையும் பொறுத்தது என்று பேசாமல் இருக்கக் கூடாது...அதன் சம்பந்தமான முழுப் பொறுப்பையும் தமிழ்நாட்டுத் தலைவர்களே ஏற்றுக் கொண்டு, அவர்களுக்கு நீதி கிடைக்கும்படி செய்ய வேண்டும்" என்று சென்ற ஏப்ரல் 24-ந் தேதி இதழில் குறிப்பிட்டிருந்தோம். திருவாங்கூர் தமிழர்கள் விஷயத்தில் அக்கரை கொள்வதென்று தமிழ்நாடு காங்கிரஸ்கமிட்டி நிர்வாகிகள் இப்போது தீர்மானம் செய்திருப்பது திருப்திகரமான விஷயமாகும். தமிழ் மாகாணம் ஏற்படும் போது அதில் திருவாங்கூரிலுள்ள தமிழர் பிரதேசங்கள் சேர்க்கப்பட வேண்டும் என்றும், திருவாங்கூர் தமிழர் காங்கிரசை, காங்கிரஸ் அலுவல்கள் சம்பந்தப்பட்ட வரையில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் அதிகார எல்லைக்குள் உடனே சேர்க்க வேண்டும் என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியைக் கேட்டுக் கொண்டும் தமிழ்நாட்டுக் காங்கிரஸில் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

திருவாங்கூர் தமிழர்களின் நியாயமான கோரிக்கையைக் கேரள காங்கிரஸ் வாதிகள் கண்டித்து அதற்கு முட்டுக்கட்டை போட்டு வருவதால், அவ் விஷயமாகத் தமிழ்நாட்டுத் தலைவர்கள் வெறும் தீர்மானத்துடன் நின்றுவிடாமல், தீவிர முயற்சி யெடுத்துக்கொண்டு திருவாங்கூர் தமிழர்களுக்கு நீதி கிடைக்கும்படி செய்ய வேண்டும். ஆந்திர மாகாணப் பிரிவினை போன்ற பிரச்னைகளைக் காட்டிலும் இது அவசரமானது. ஏனெனில், சென்னை மாகாணத்திலுள்ள ஆந்திரர்களோ, மலையாளிகளோ, அல்லது பம்பாய் மாகாணத்திலுள்ள மகாராஷ்டிரர்களோ நிர்வாக வசதிகளுக்காகத் தனி மாகாணம் கோருகிறார்களே யன்றி, அவர்களுக்கு மேற்படி மாகாணங்களில் யாரும் அநீதி இழைக்கவில்லை. ஆனால், திருவாங்கூர் தமிழர் பிரச்னை முற்றிலும் வேறாகும். அவர்கள் பல இன்னல்களுக்கும் அநீதிகளுக்கும் ஆளாகி வருகிறார்கள். எனவே, அவைகளிலிருந்து அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டுமாயின், திருவாங்கூரில் தமிழர் வசிக்கும் பிரதேசங்கள் தமிழ்நாட்டுடன் தாமதமின்றிச் சேர்க்கப்பட வேண்டும்.

## அக்கிரமமான கூற்று

சர்க்கார் நடவடிக்கைகளை ஆட்சேபிக்கும் சில கண்டனவாதிகளின் போக்கு விசித்திரமாக இருக்கிறது. கைத்தொழில்கள் எல்லாம் பொதுச் சொத்தாகிவிட வேண்டும், அதாவது பொது ஜன சர்க்காரின் நிர்வாகத்தில் வந்து விட வேண்டும் என்று அவர்கள் கூறுகிறார்கள். சர்க்கார் நிர்வாகத்தில் வருவதுதான் தேசத்துக்கும் தொழிலாளருக்கும் க்ஷேமம் என்றும் அவர்கள் கருதுகிறார்கள். ஆனால், அதே சமயத்தில் பொதுச் சொத்தாக இருக்கும் ரயில்வேக்களிலுள்ள தொழிலாளரை வேலை நிறுத்தம் செய்யும்படி தூண்டிவிடுகிறார்கள்.

இந்திய மக்களில் பெரும்பாலோர் ஏழைகளே. தொழிலாளரும் அந்தப் பெரும்

பாலேவரைச் சேர்ந்தவர்கள்தான். இந்தியா சுதந்திரம் பெற்றது அந்த ஏழைகளின் உத்தாரணத்துக்காகவே யன்றி, வேறல்ல. அப்படியிருக்க, இந்தியாவில் இப்போதுள்ள சர்க்கார் தொழிலாளருக்கு விரோதிகள் என்று சொல்வதற்கும், பொதுஜனங்கள் எல்லோரும் தொழிலாளருக்கு விரோதிகள் என்று சொல்வதற்கும் வேற்றுமை யில்லை.

சென்ற வாரம் சென்னையில் கூடிய ஹிந்த் மஜ்தூர் சபை மகாநாட்டின் தலைவர், பண்டித ஜவாஹர்லால் நேருவையும் சர்தார் பட்டேலையும் தலைவராகக் கொண்ட சர்க்கார் தொழிலாளரின் விரோதிகள் என்று கூறியிருப்பதைக் காட்டிலும் அக்கிரமமான கூற்று வேறு எதுவும் இருக்க முடியாது. "சர்வபரித் தியாகம் செய்த தலைவர்கள் அடங்கிய சுதந்திர சர்க்கார் தங்களுக்கு விரோதிகளா, அல்லது அரசியல் ஆதிக்க நோக்கம் கொண்டு தங்களைத் தூண்டிவிடுவோர் விரோதிகளா?" என்பதை அறிந்துகொள்ளும் ஆற்றல் பெரும்பாலான தொழிலாளருக்கும் உண்டு. அவ்வாறு பிரசாரம் செய்வோர் முன்பு இந்தியாவை ஆட்சி புரிந்த பிரிட்டிஷ் சர்க்காரைப் போல் சுதந்திர இந்திய சர்க்காரையும் நினைத்து வருகிறார்கள். எனவே. அத்தகையோர் இறந்த காலத்தில் கட்டுண்டு கிடப்பதால்தான், அவர்களுக்கு நிகழ்காலத்தையோ எதிர் காலத்தையோ பார்க்கும் சக்தி இல்லை என்று சமீபத்தில் ஜவாஹர்லால்ஜி கூறியது முற்றிலும் உண்மையே ஆகும்.

## இன்னும் சந்தேகமா?

மா பெரும் தலைவர்கள் அடங்கிய சுதந்திர இந்திய சர்க்காரைத் தொழிலாளரின் விரோதிகள் என்று கூசாமல் கூறும் மனப்பான்மை யுடையவர்கள், சர்க்கார் செய்யும் எந்தக் காரியத்தைத்தான் ஆதரிக்கப் போகிறார்கள்! அத்தகையோர் காமன்வெல்த் மகாநாட்டில் ஏற்பட்ட முடிவைப் பற்றிக் குறை கூறுவதில் ஆச்சரியமில்லை. எனவே, அவர்களுடைய கண்டன ஜாப்தாவில் அந்த விஷயமும் இடம் பெற்றிருக்கிறது.

காமன்வெல்த் மண்டலத்தில் இருப்பதால் இந்தியாவுக்குள்ள நன்மையைப் பற்றி லண்டனில் நடந்த கூட்டங்களிலும், அகில இந்திய வானொலி மூலமும், சென்ற பதினாறாம் தேதி ஆரம்பமான அரசியல் நிர்ணய மகா சபையிலும் ஜவாஹர்லால்ஜி மிகவும் தெளிவாக எடுத்துச் சொல்லி யிருக்கிறார். அதில் இரகசிய நிபந்தனை எதுவுமில்லையென்றும் உறுதி கூறி யிருக்கிறார். காமன்வெல்த் மகாநாட்டின் முடிவு இந்தியா ஏற்கெனவே எடுத்துக் கொண்டுள்ள பிரதிக்ஞைக்கு எவ்விதத்திலும் முரணல்ல; காமன்வெல்த் நாடுகளுடன் தொடர்பு கொண்டிருப்பது இந்தியாவுக்குப் பலவிதத்திலும் நன்மையே என்பதை ராஜாஜி, சர்தார் பட்டேல் போன்ற அரிய தலைவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இந்தியா எந்த நாட்டையும் விரோதியாகக் கருதவில்லை. சகிக்க முடியாத இன்னல்கள் இழைத்த பாகிஸ்தான் உட்பட எல்லா நாடுகளுடனும் உறவு கொள்ளவே இந்திய சர்க்கார் விரும்புகின்றனர்.

இணையற்ற படைபலமும் பண பலமும் வாய்க்கப் பெற்றுள்ள அமெரிக்கா கூட இந்தியாவின் நல்லுறவை நாடுகிறது. அதற்கு அறிகுறியாகவே இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவை அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் தமது தேசத்துக்கு விஜயம் செய்யும்படி வருந்தி அழைத்திருக்கிறார். இவ்வாறாக, மகா பலம் பொருந்திய நாடுகளே பிற நாடுகளின் உறவை நாடுகையில், இந்தியா பரிபூரணக் குடியரசு என்ற முறையில் அணுவளவும் தன்னுடைய அதிகாரத்தை விட்டுக் கொடுக்காமல் பிரிட்டனுடனும் மற்ற நாடுகளுடனும் உறவு வைத்துக் கொள்வதில் தவறு என்ன?




பண்டித ஜவாஹர்லால் நேரு இங்கிலாந்து சென்று சாம்ராஜ்யத்துடன் இந்தியக் குடியரசு தொடர்பு வைத்துக்கொள்வது பற்றிச் செய்து கொண்டு வந்த முடிவை ஒரு சில கண்டனப் பிரியர்கள் குறை கூறுகிறார்கள்.

## கடும் மருந்து!

செக்ஷன் 93

மாகாணங்களில் பரவிவரும் கோஷ்டி வாதத் தொல்லையை ஒழிக்கும் பொருட்டு 93-வது பிரிவை உபயோகிக்க வேண்டி வரும் என்று சர்தார் படேல் எச்சரித்திருக்கிறார்

கோஷ்டி வாதம்

## வாயில் சர்க்கரை, நெஞ்சில்....!

உன் கதிக்காகக் கண்ணீர் விடுகிறேன்; ஆனால் ஒரு உதவியும் செய்வதற்கில்லை!

மலாய் சர்க்கார் அவசரச் சட்டம்

மலாயா இந்தியர்

அனுதாபம்

பிரிட்டிஷ் சர்க்கார்

— SHASTRY

# பலப் பரீட்சைகள் முடிந்தன

பத்து மாதங்களுக்கு முன் ஒரு பெரிய யுத்தம் ஆரம்பமாயிற்று.

உலகிலேயே மிகவும் வலிமை வாய்ந்த இரண்டு வல்லரசுகள் மோதிக்கொண்டன.

அந்த யுத்தத்தில் போர்த் தளவாடங்கள் உபயோகிக்கப் படவில்லை; எனினும், அதன் கோரத் தன்மை பல நாடுகளையும் கலங்க வைத்தது.

ஆயுதப் பிரயோகமின்றி நடந்த அந்தப் போரில் ஆயிரக்கணக்கான விமானங்கள் கலந்து கொண்டன. "இருபது லட்சம் ஜெர்மானியர்கள் இருப்பதா, பட்டினி கிடந்து இறப்பதா?" என்ற கேள்வி பிறந்தது.

சென்ற மகாயுத்தத்தில் தோல்வியுற்ற ஜெர்மனி நாலு கூறுகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதும், அவை ஒவ்வொன்றிலும் முறையே ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் இவற்றின் ஆதிக்கம் இருந்து வருவதும் யாவரும் அறிந்ததே.

ஐரோப்பிய யுத்தத்தில் உயிரிலும் உடைமையிலும் தன்னைவிட அதிக நஷ்டம் அடைந்த நாடு வேறு எதுவுமில்லை யாதலின், ஜெர்மனியில் ஆதிக்கம் செலுத்தும் விஷயமாகத் தனக்குத்தான் அதிக பங்கு உண்டென்று ருஷ்யா கருதியது. எனவே, பெர்லினில் கரன்ஸி நோட்டுகள் வெளியிடும் அதிகாரம் தங்களுடைய தனி உரிமையாக இருக்க வேண்டும் என்று ருஷ்ய அதிகாரிகள் கூறினர்.

அந்த அதிகாரத்தில் தங்களுக்கும் பங்கு இருக்கவேண்டும் என்று அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் அதிகாரிகள் வற்புறுத்தினர்.

அவ்விஷயமாக சமரசம் எதுவும் ஏற்படாததால், அந்த நாடுகள் அதனதன் பிரதேசங்களில் சொந்தமாக கரன்ஸி நோட்டுகளை வெளியிட்டுக் கொள்வது என்று தீர்மானம் செய்தன.

• • •

ருஷ்யா கோரிய தனி உரிமையை அளிக்க அந்த மூன்று வல்லரசுகளும் மறுத்துவிட்டதால், அவைகளுக்கும் ருஷ்யாவுக்கும் தகராறு ஏற்பட்டது.

பெர்லினில் அந்த வல்லரசுகளின் ஆதிக்கத்திலுள்ள மேற்குப் பகுதிப் பிரதேசங்களுக்கு ருஷ்ய அதிகாரிகள் மின்சார சப்ளையை நிறுத்திவிட்டனர். ரயில் போக்குவரத்தையும் தடுத்து விட்டார்கள்.

எனவே, அந்தப் பகுதிகளில் கைத்தொழில்கள் ஸ்தம்பித்து விட்டன; ரயில் வண்டிகள் செல்லாததால் உணவுப் பொருள்கள் வருவதற்கு வழியின்றி சுமார் இருபது லட்சம் ஜெர்மானியர்கள் தவிக்க நேர்ந்தது.

ரயில்வே, மின்சார நிலையம் முதலிய முக்கிய சாதன வசதிகள் ருஷ்யா ஆதிக்கம் செலுத்தும் பகுதியில் இருப்பதால், அமெரிக்கா முதலிய வல்லரசுகளின் மீது உடனே வஞ்சம் தீர்ப்பது ருஷ்யாவுக்குச் சாத்தியமாகியது.

அதன் விளைவாக, லட்சக்கணக்கான ஜெர்மானியர் பட்டினி கிடக்க நேரும் என்பதை எடுத்துக் காட்டி, பிடிவாதத்தைக் கைவிடுமாறு மேற்படி வல்லரசுகள் ருஷ்யாவை மன்றாடிக் கேட்டுக் கொண்டன; அவ்விஷயமாக யுத்தமும் ஏற்படலாம் என்று எச்சரித்தன. ஆனால், ருஷ்யா எதற்கும் மசியவில்லை.

உடனே, அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் வெகு மும்முரமாக மந்திராலோசனைகள் நடந்தன. இராணுவத் தலைவர்கள் கலந்து ஆலோசித்தார்கள். ருஷ்யாவின் தடைகள் காரணமாக அமெரிக்க, பிரிட்டிஷ், பிரஞ்சுப் பகுதிகளில் யுத்தகாலச் சிக்கன முறைகள் அனுஷ்டிக்கப் பட்டன. ருஷ்யா பணிந்தாலன்றி ஜெர்மானியர்களின் பாடு திண்டாட்டமாகிவிடும் என்று அந்த வல்லரசுகளின் பிரதிநிதிகள் பிரசாரம் செய்தார்கள்.

எனவே எந்த நிமிஷத்திலும் போர்த்தீ பற்றிக் கொள்ளலாம் என்று தோன்றியது!

• • •

"தோல்வியடைந்த எங்களை ஏன் துன்புறுத்துகிறீர்கள்? ஜெர்மனியிலிருந்து நாலு வல்லரசுகளும் வெளியேறினாலன்றி எங்களுக்குக் கதிமோட்சம் ஏற்படாது" என்று ஜெர்மன் தலைவர்கள் கதறினர்.

ஜெர்மானியர்கள் பட்டினி கிடக்காமல் தடுக்க வேண்டுமாயின் அவர்களுக்கு ஆகாய வழியாக உணவுப் பொருள்கள் வரவேண்டும்; இல்லாவிடில் ருஷ்யாவுடன் போர் தொடுத்து அதன் ஆதிக்கத்திலுள்ள பிரதேசத்தைக் கைப்பற்ற வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது.

ஜெர்மானியர்களுக்கு விமானங்களில் தற்காலிகமாக உணவுப் பொருள்களைக் கொண்டுவரும் பெரும் பொறுப்பை அமெரிக்கா ஏற்றுக் கொண்டது.

மின்சார சப்ளையை ருஷ்யா கத்தரித்து விட்டதால், சென்ற பல மாதங்களாக மூன்று வல்லரசுகளின் பகுதிகளிலுள்ள பேர்லின் பிரதேசமெல்லாம் இருள் சூழ்ந்து கிடந்தது.

ஒரு நாளல்ல, பத்து நாட்களல்ல, சென்ற முந்நூறு நாட்களாக அவ்வாறே நடந்து வந்தன.

பத்து மாதகாலம் வரையில் பத்து லட்சக்கணக்கான ஜனங்களுக்கு விமானங்களின் மூலம் உணவுப் பொருள்களைக் கொண்டு போவதென்பது எளிதான காரியமா?

உலகிலே முன்பின் நிகழ்ந்திராத அந்த மகத்தான சோதனையில் அமெரிக்கா வெற்றிபெற்றது எனலாம்!

எனினும், ருஷ்யா தோல்வியுறவில்லை.

பேர்லின் ஜனங்களுக்கு உணவுப் பொருள்களைக் கொண்டு வந்ததன் மூலம் அமெரிக்கா தன்னுடைய விமான பலத்தையும் சாகஸத்தையும் காட்டியுள்ளது.

சென்ற பல வருஷங்களாக அமெரிக்கா எல்லா விதத்திலும் எவ்வளவோ உதவி செய்தும் கூட சீனாவைக் காப்பாற்ற முடியவில்லை. அங்கு ருஷ்யாவின் உதவி பெற்ற கம்யூனிஸ்டுகளே வெற்றி பெற்றுள்ளனர். எனவே, பிரம்மாண்டமான சீன தேசத்தைத் தன்னுடைய அரசியல் ஆதிக்கத்தின்கீழ் கொண்டு வருவதன்மூலம் ருஷ்யாவும் தன்னுடைய பலத்தைக் காட்டியிருக்கிறது!

கடைசியாக, "பேர்லின் முட்டுக் கட்டை" என்று சரித்திரப் பிரசித்தி பெற்றுள்ள வல்லரசுகளின் மேற்படி பலப் பரீட்சை கோர யுத்தத்தில் வந்து முடியாமல் சமரசமாகத் தீர்ந்தது மகிழ்ச்சிக்குரிய சம்பவமாகும்.

அவ்விஷயமாக மீண்டும் சில்லறைத் தகராறுகள் இருந்து கொண்டுதான் இருக்குமென்றாலும், அவற்றின் விளைவாக யுத்தம் ஏற்படும் என்ற பீதிக்கு சமீபத்தில் இடமில்லை அல்லவா?

பேர்லின் தகராறை யொட்டி அமெரிக்கா முதலிய மூன்று வல்லரசுகளுக்கும் ருஷ்யாவுக்கும் சமரசம் ஏற்பட்டு விட்டதால், பாலைவனம்போல் கிடந்த பேர்லின் பகுதிகளில் மீண்டும் ரயில் வண்டிகள் ஓடுகின்றன! ஜனங்களுக்கு உணவுப் பொருள்கள் வருகின்றன! இருள் நீங்கி விளக்குகள் எரிகின்றன!

• • •

ஜனநாயகம் வாழ்வதா, வீழ்வதா என்பது பற்றி இந்தோனேஷ்யாவில் நடந்த பலப் பரீட்சையும் ஓரளவு திருப்திகரமாக முடிந்திருக்கிறது. மேற்படி பரீட்சையும் சென்ற பல மாதங்களாக நிகழ்ந்து வந்தது.

எனினும் பேர்லினில் நடந்ததைப் போலன்றி, இந்தோனேஷ்யாவில் ஜனநாயகத்துக்கும் ஏகாதிபத்தியத்துக்கும் கோர யுத்தமே நடந்தது.

இந்தோனேஷ்யத் தலைவர்கள் சிறையில் தள்ளப்பட்டார்கள்; ஜனங்கள் பலியிடப்பட்டனர்.

இந்தோனேஷ்யக் குடியரசுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களையும், ஐக்கிய நாடுகள் சபையின் தீர்மானத்தையும் காற்றுவாக்கில் விட்டுவிட்டு டச்சு ஏகாதிபத்தியம் குடியரசின் கழுத்தை நெரிக்க முற்பட்டது. குழந்தைப் பருவத்திலுள்ள குடியரசைக் கொல்வது எளிது என்ற நம்பிக்கையே டச்சு ஏகாதிபத்தியத்தின் போர் வெறிக்குக் காரணமாகும்.

ஆனால், அமெரிக்காவின் செய்கையை உலக வல்லரசுகள் சகித்துக் கொண்டிருந்தாலும்,—உலக சபையான ஐ. நா. சபை சகித்துக் கொண்டிருந்தாலும் தாங்கள் சகித்துக் கொண்டிருக்கப் போவதில்லை என்பதை ஆசிய நாடுகள் ஐயமின்றித் தெரிவித்தன.

இந்தோனேஷ்யாவில் டச்சுக்காரர்கள் அநியாய போரில் இறங்கியதை இந்தியா பலமாகக் கண்டித்தது. வெறும் கண்டனத்துடன் நிற்கவில்லை. டச்சு விமானங்கள் இந்தியா வழியாகச் செல்லுவதைத் தடுத்தது. மேற்கொண்டும் தகுந்த நடவடிக்கைகளைக் கைக்கொள்வதற்காக ஆசிய நாடுகளின் மகாநாடு ஒன்றைக் கூட்டியது.

அந்த மகாநாட்டில் பத்தொன்பது ஆசிய நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

"டச்சு சர்க்கார் அதிகாரிகள் இந்தோனேஷ்யக் குடியரசுத் தலைவர்களை உடனே விடுதலை செய்ய வேண்

டும். இந்தோனேஷ்யாவில் இடைக்கால சர்க்காரை அமைக்க வேண்டும்... 1950-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதிக்குள் டச்சுக்காரர்கள் தங்களுடைய அதிகாரம் முழுவதையும் இந்தோனேஷ்யர்களிடம் ஒப்புவித்து விடவேண்டும்'' என்று அந்த மகாநாட்டில் ஏகோபித்து ஒரு தீர்மானமும் நிறைவேறியது.

அதற்கு முன் ஐக்கிய நாடுகள் சபை செய்த தீர்மானத்தை டச்சு சர்க்கார் அலட்சியம் செய்ததைப் போல் ஆசிய நாடுகளின் தீர்மானத்தை அலட்சியம் செய்யத் துணியவில்லை என்பது சமீபத்தில் அவர்கள் இந்தோனேஷ்யக் குடியரசுடன் செய்துகொண்டுள்ள ஒப்பந்தத்திலிருந்து தெரிகிறது.

அந்த ஒப்பந்தத்தின் விவரங்கள் என்ன? அவைகள் எவ்வளவு தூரம் அமுலுக்கு வரும்? இவை போன்ற கேள்விகள் அவ்வளவு முக்கியமானவையல்ல.

ஆனால், இந்தோனேஷ்யக் குடியரசுத் தலைவர்கள் வெறும் கலகக்காரர்கள் என்றும், மேற்படி குடியரசைத் தாங்கள் அங்கீகரிக்கவே முடியாது என்றும் கூறிவந்த டச்சு அதிகாரிகள், அங்கு அரசியல் கைதிகளையெல்லாம் விடுதலை செய்திருப்பதும், குடியரசு சர்க்காரை அங்கீகரித்திருப்பதும்தான் பெரிய காரியம்.

எனவே, ஆசிய நாடுகள் ஒன்றில் ஜனநாயகத்துக்கும் ஏகாதிபத்தியத்துக்கும் நடந்த பலப் பரீட்சையில், ஜனநாயகமே வெற்றி பெற்றிருக்கிறது.

ஆசிய நாடுகள் மகாநாட்டின் தீர்மானத்துக்கு இணங்க, 1950-ம் வருடம் டச்சுக்காரர்கள் தங்களுடைய முழு அதிகாரத்தையும் இந்தோனேஷ்யர்களிடம் ஒப்புவிப்பதற்கு மேற்படி ஒப்பந்தம் முதல் படியாக இருக்கும் எனஎதிர்பார்க்கலாம்!

• • •

சென்ற இரண்டு வருஷங்களுக்கு மேலாக நடந்துவரும் மற்றொரு பலப் பரீட்சையையும் கவனிப்போம்.

அது தென்னாப்பிரிக்காவுக்கும் ஐக்கிய நாடுகள் சபைக்கும் நடந்துவரும் பரீட்சையாகும். தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களை நிற வேற்றுமைக் கொடுமைக்கு உட்படுத்தக் கூடாது என்று ஐக்கிய நாடுகள் சபை தீர்மானம் செய்வதும், அந்தத் தீர்மானம் தங்களை என்ன செய்யும் என்று தென்னாப்பிரிக்க சர்க்கார் சவால் விடுவதும் சகஜமாகி யிருக்கிறது.

தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் இருப்பதால்தானே, அவர்கள் தங்களுக்கு நீதி வழங்கவேண்டும் என்று கேட்கிறார்கள்; எனவே அவர்களை விரட்டிவிட்டால் அந்தப் பிரச்னையைச் சுலபமாகத் தீர்த்துவிடலாம் என்று துணிந்து மேற்படி சர்க்கார் இப்போது காரியங்களைச் செய்து வருகின்றனர்.

இந்தியாவுக்குத் திரும்பிச் செல்வோருக்கு போனஸ் தொகை கொடுத்து வருகிறார்கள். திரும்பிச் செல்ல மனம் இராதவர்களைக் கொடிய அடக்குமுறைகளைக் கைக் கொண்டு விரட்டப் பார்க்கிறார்கள்.

சென்ற வருஷம் போனஸ் தொகை பெற்று இந்தியாவுக்குச் சென்றவர்களின் தொகை ஐம்பது கூட இல்லை. அடக்குமுறைகளைக் கண்டும் இந்தியர்கள் அஞ்சுவதாகத் தெரியவில்லை.

இப்போது, ஆப்பிரிக்க சுதேசிகளுக்கும் இந்தியர்களுக்கும் கலகத்தை மூட்டி ஏராளமானவர்கள் பலியாகும்படியான பாதக தந்திரத்தையும் தென்னாப்பிரிக்க சர்க்கார் கைக் கொண்டிருக்கிறார்கள்.

எனினும் இத்தகைய தந்திரங்களால் லட்சக்கணக்கான இந்தியர்களைத் தென்னாப்பிரிக்காவிலிருந்து விரட்டிவிட முடியாது.

தென்னாப்பிரிக்கா பிரச்னையையொட்டி சமீபத்தில் ஐ. நா. சபையில் ஒரு தீர்மானம் வந்தபோது, தென்னாப்பிரிக்கா இதற்கு முன் ஒருபோதும் இராதவாறு படு தோல்வியடைந்தது. அத் தேசத்திலுள்ள இந்தியர்கள் படும் துன்பத்தையொட்டி இந்தியா, பாகிஸ்தான், தென்னாப்பிரிக்கா பிரதிநிதிகள் வட்டமேஜை மகாநாட்டைக் கூட்டி ஒரு சமரசத்துக்கு வரவேண்டும் என்பதே அந்தத் தீர்மானமாகும். அதை ஆதரித்து நாற்பத்தேழு நாடுகள் வோட்டுக் கொடுத்தன. அதற்கு விரோதமாக தென்னாப்பிரிக்காவைத் தவிர வேறு எந்த நாடும் வோட்டுக் கொடுக்கவில்லை!

எனவே மேற்படி சம்பவத்திலிருந்து நாவது காற்று எந்தப் பக்கம் அடித்து வருகிறது என்பதைத் தென்னாப்பிரிக்க சர்க்கார் உணர்ந்து, அச்சபையில் நிறைவேறிய தீர்மானத்தை அனுசரித்து சமரச முறையை நாடுவதே சிறந்தது.

அட்டைப்பட விளக்கம்

# விஜயராகவன் ஐ. ஸி. எஸ்.

இந்தியப் பொது மக்கள் இரண்டு வருஷத்துக்கு முன்பு வரையில் சர்க்கார் உத்தியோக வர்க்கத்தினரை விரோத மனப்பான்மையுடனேயே பார்த்தார்கள். அதிலும் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் என்றால் தேசத்தின் விரோதிகள் என்று கருதினார்கள். பாமர மக்கள் போலீஸாருக்கு அறிகுறியான சிவப்புத் தலைப்பாகைகளைக் கண்டதும் ஓடி ஒளித்தார்கள்.

"சிப்பாயைக் கண்டஞ்சுவார் — ஊர்ச்
சேவகன் வருதல்கண்டு ஓடி ஒளிப்பார்!"

என்று தேசிய மகா கவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரும் பாடியிருக்கிறார்.

இந்தியா தேசம் அன்னிய ஆட்சிக்கு உட்பட்டிருந்த போது இந்திய மக்கள் மேற்கண்ட மனோபாவம் கொண்டிருந்தது இயல்பே யாகும். பிரிட்டிஷார் நடத்திய அடக்கு முறைக்குப் போலீஸ் படை முக்கிய கருவியாக இருந்தபடியால் பொது மக்கள் போலீஸாரை எதிரி மனப்பான்மையுடன் பார்ப்பது வழக்கமாயிற்று. கொலை, களவு முதலிய பயங்கரக் குற்றங்களும் கலவரங்களும் குழப்பங்களும் நேராமல் தடுத்துச் சமூகத்தைப் பாதுகாக்கும் மிக முக்கியமான சேவையைச் செய்பவர்கள் போலீஸார் என்பதைப் பொது மக்கள் மறந்து விடவும் ஏதுவாகியிருந்தது.

இந்தியா சுதந்திரம் அடைந்துவிட்ட பிறகு பொது மக்கள் பழைய மனப்பான்மையை மாற்றிக் கொள்வது பரம முக்கிய மாகும். சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சமூகத்துக்குச் சேவை செய்கிறவர்கள் என்பதையும், போலீஸார் சமூகத்தின் பாதுகாப்பாளர் என்பதையும் பொது மக்கள் உணருவது மிகவும் அவசியம். அது போலவே சுதந்திர இந்திய நாட்டில் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் போலீஸ் அதிகாரிகளும் தங்களுடைய மனப் போக்கை மாற்றிக் கொண்டு பொது மக்களுக்குச் சேவை செய்யவே தாங்கள் ஏற்பட்டவர்கள் என்பதை நன்கு உணர்ந்துகொள்ள வேண்டும்.

மேற்கூறிய இருவித மனமாறுதல்களும் ஏற்படுவதற்குச் சமீப காலத்தில் நம் சென்னை மாகாணத்தில் ஸ்ரீ ஸி. கே. விஜயராகவன் ஐ. ஸி. எஸ். பேருதவி புரிந்திருக்கிறார். பிரிட்டிஷ் ஆட்சி நடந்த வரையில் போலீஸ் இலாகாவின் தலைவராக அந்த இலாகாவிலேயே ஊறிப் பழுத்த ஐரோப்பியரை நியமிப்பதே வழக்கமாயிருந்து வந்தது. ஓமந்தூர் ரெட்டியார் பிரதம மந்திரி பதவி வகித்த காலத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் உத்தியோகம் காலியானபோது அந்தப் பதவிக்கு யாரை நியமிப்பது என்ற கேள்வி எழுந்தது. ஏற்கெனவே பல பொறுப்பு வாய்ந்த நிர்வாகப் பதவிகளை வகித்துப் புகழ் பெற்ற ஸ்ரீ ஸி. கே. விஜயராகவன் ஐ. ஸி. எஸ். அந்தப் பதவிக்கு நியமிக்கப்பட்டார். இந்த நியமனம் போலீஸ் இலாகாவைப் பற்றி மக்களின் மனோபாவம் மாறுவதற்கே ஓரளவு உதவி செய்தது என்று சொல்ல வேண்டும். போலீஸ் இலாகாவுடன் சம்பந்தப் படாதவரும் சமூகத்தில் அனைவருடனும் சகஜமாகப் பழகி வந்தவருமான ஒரு பிரமுகர் போலீஸ் இலாகாவுக்குத் தலைவரான காரணத்தினால் போலீஸ் வர்க்கத்தின் அந்தஸ்து உயர்ந்து செல்வாக்கு மிகுந்தது.

ஸ்ரீ ஸி. கே. விஜயராகவன் ஐ. ஸி. எஸ். போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பதவி வகித்த காலத்தில் சென்னை மாகாணத்தில் பல நெருக்கடிகள் ஏற்பட்டன. அவற்றில் முக்கியமானது ஹைதராபாத் எல்லைக் குழப்பமும் இந்திய சர்க்கார் எடுத்த போலீஸ் நடவடிக்கையுமாகும். இந்தக் கட்டத்தில் யாவரும் வியக்கும்படியாக ஸ்ரீ விஜயராகவனுடைய திறமை வெளியாயிற்று. மலையாளத்தில் பலாத்காரத்தில் நம்பிக்கையுள்ள கம்யூனிஸ்டுகளினால் மிகப் பயங்கரமான செயல்கள் பல நிகழ்த்தப்பட்டன. அந்தப் பயங்கரச் செயல்களை ஸ்ரீ விஜயராகவன் தீவிர நடவடிக்கையினால் அடக்கினார். தமது கடமையை ஆற்றுவதில் தம் உயிருக்கு நேர்ந்த அபாயங்களை அவர் சிறிதும் பொருட்படுத்தவில்லை.




சென்னையில் தூர்ப்போதனைக்காரர்களின் தூண்டுதலினால் நடந்த மோட்டார் பஸ் வேலை நிறுத்தம் ஸ்ரீ விஜய

ராக்வனுடைய திறமையான கடவடிக்கையினல் இருபத்தநாலு மணி கோத்துக்குள் ஒடுக்கிவிடப்பட்டது. இதனல் சென்னைவாசிகளுக்கு நேர்ந்திருக்கக் கூடிய எல்லையற்ற இன்னல்கள் நேராமல் தடுக்கப்பட்டன.

இவ்வாறெல்லாம் பொதுஜனங்களுக்கும் பொதுஜன சர்க்காருக்கும் இணையில்லாத தொண்டு செய்து போலீஸ் இலாகாவுக்குப் புகழையும் பொது மக்களுடன் நேசத் தொடர்பையும் அளித்த ஸ்ரீ சி. கே. விஜய ராகவன் ஐ. வி. எஸ். இப்போது போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பதவியிலிருந்து விலகிக்கொண்டு பழையபடி சர்க்கார் நிர்வாக உத்தியோகம் ஏற்றுக் கொண்டிருக்கிறர்.

சுதந்திர இந்தியாவில் நிர்வாகம் நன்கு நடைபெறுவதற்கும் நாடு செழிப்பதற்கும் சமூகத்தில் பயங்கரக் குழப்பங்கள் ஏற்படாமல் தடுப்பதற்கும் ஸ்ரீ சி. கே. விஜய ராகவன் அவர்களைப் போன்ற திறமை வாய்ந்த உத்தியோகஸ்தர்களின் சேவை மிகவும் அவசியமாகும். அநுபவமும் திறமையும் வாய்ந்த பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் பலர் சுதந்திர இந்தியாவை விட்டுப் போய்விட்டார்கள். மிச்சமுள்ள திறமையும் நேர்மையும் வாய்ந்த இந்திய உத்தியோகஸ்தர்களைப் பொது மக்களும் பொதுஜன சர்க்காரும் ஊக்கப்படுத்தி உற்சாகமளித்து வைப்பது மிகவும் அவசியம்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பதவி வகித்தபோது எடுத்த ஸ்ரீ சி. கே. விஜய ராகவன் அவர்களின் உருவப் படத்தை இந்த இதழ் அட்டையில் காணலாம்.

---

# தொழிற் செல்வரின் பிரயாணம்

நீங்கள் மோட்டார் கார் வாங்கியதுண்டா? அப்படியானல், ஸ்ரீ டி. வி. எஸ். துரைசாமி அவர்களை உங்களுக்குத் தெரிந்திருக்கும். இனிமேல் மோட்டார் கார் வாங்கும் உத்தேசம் உங்களுக்கு உண்டா? அப்படியானல் ஸ்ரீ டி. வி. எஸ். துரைசாமி அவர்களை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்! மதுரை ஸ்ரீ டி. வி. சுந்தரம் ஐயங்கார் அவர்களின் குமாரரும், சென்னை சுந்தரம் மோட்டார்ஸ் கம்பெனியின் மானேஜிங் டைரக்டருமான ஸ்ரீ டி. வி. எஸ். துரைசாமி பி. ஏ. அவர்களைத்தான் குறிப்பிடுகிறேம்.



சுதந்திர இந்தியா செழிக்க வேண்டுமானல் இந்தியாவில் பலவிதத் தொழில்களும் ஓங்கி வளர வேண்டும். புது உலக வாழ்க்கையில் மிக முக்கியமான பிரயாண சாதனமாக விளங்குவது மோட்டார் வண்டி. கோடானு கோடி ரூபாய் பணப் புழக்கம் உள்ள மாபெருந் தொழில் மோட்டார்த் தொழில்.

மோட்டார் வியாபாரம், மோட்டார் பஸ் போக்குவரவு, மோட்டார் ரிப்பேர் முதலியவற்றில் தென்னுட்டில் வழிகாட்டிப் புகழ் பெற்றுள்ளவர்கள் ஸ்ரீ டி. வி. எஸ். குடும்பத்தினர். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த பிரமுகர் ஸ்ரீ டி. வி. எஸ். துரைசாமி வாசாலகத்திலும், வியாபார நுட்பத்திலும், நிர்வாகத் திறமையிலும் சிறந்தவர். மோட்டார்த் தொழில் வளர்ச்சி சம்பந்தமாக ஆராய்ச்சி செய்து வரும் நோக்கத்துடன் ஸ்ரீ துரைசாமி மேனுட்டுக்குப் பிரயாணமாகி யிருக்கிறர். அமெரிக்காவுக்கும், இங்கிலாந்துக்கும், மற்றும் ஐரோப்பிய நாடுகளுக்கும் சென்று சுமார் ஆறு மாதம் பிரயாணம் செய்துவிட்டுத் திரும்புவார். ஸ்ரீ துரைசாமி பிரயாணத்தை இனிது முடித்துக்கொண்டு சுகமாகத் திரும்ப வேண்டுமென்று பிரார்த்திக்கிறேம். அவரது யாத்திரை அவருக்கும் நாட்டுக்கும் லாபகரமானதா யிருக்க வேண்டுமென்று விரும்புகிறேம்.

# கவலை வேண்டாம்!

சபரி

ஒரு பெரிய மேஜை. அந்த மேஜை மேலே கட்டுக் கட்டாகப் பல தஸ்தாவேஜுகளும் பத்திரிகைக் குறிப்புகளும் மலைபோலக் குவிந்திருந்தவ. அத்தனைக்கும் மத்தியில் யாரோ ஒரு ஆள் அங்கே இருக்குமிடமே தெரியாதபடி உட்கார்ந்த வண்ணம் அந்த தஸ்தாவேஜுகளை ஒவ்வொன்றாக எடுப்பதும், வாசிப்பதும் அவற்றின் சில பகுதிகளை சிவப்புப் பென்சிலாலும் நீலப் பென்சிலாலும் அடையாள மிடுவதுமாக இருந்தார்.

அந்தக் கடுதாசிக் கட்டுகளைக் கொஞ்சம் ஒதுக்கிவிட்டுப் பார்க்கும்போது, அங்கே உட்கார்ந்திருந்த ஆள் வேறு யாரும் அல்ல, நம்முடைய சென்னை மாகாண மாஜி பிரதம மந்திரி ஸ்ரீ பிரகாசம் பந்துலுகாருதான் என்பது நன்றாகத் தெரிய வந்தது.

ஸ்ரீ பிரகாசம் அப்படிக் கண்ணையும் கருத்தையும் செலுத்தி அந்தக் கடுதாசிக் கட்டுகளைப் படித்துக் கொண்டிருந்த போது, "பந்துலுகாரு! நமஸ்காரமண்டி!" என்று ஒரு குரல் கேட்டது.

ஸ்ரீ பிரகாசம் கடுதாசிக் கட்டுகளைக் கீழே போட்டுவிட்டு முன்னால் பார்த்தார். முன்பின் அறிமுகம் இல்லாத ஒரு பேர்வழி வாசலில் நின்ற வண்ணம் அவருக்கு நமஸ்காரம் செய்தார்.

"ரண்டி! ரண்டி!" என்று சொல்லிவிட்டு, ஸ்ரீ பிரகாசம் தமக்குப் பக்கத்தில் இருந்த ஒரு நாற்காலியைச் சுட்டிக்காட்டி அதில் அவரை உட்காரச் சொன்னார்.

அந்தப் பேர்வழி உட்கார்ந்தார். ஒரு தடவை அந்த அறை முழுவதும் பார்த்தார். மேஜைமேலே இருந்த தஸ்தாவேஜுக் கட்டுகள் அவர் கருத்தைக் கவர்ந்தன.

"இதெல்லாம் ஏமி லார்?" என்று கேட்டார்.

"அதுவா? நான் மந்திரிகள் மீது புகார்கள் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் ஸ்ரீ பிரகாசம்.

"ஓஹோ, புகார்களா? எந்த மந்திரிகள்மீது புகார்கள்?"

"இது என்ன கேள்வி? பழைய மந்திரிகள் ஏழு பேர் மீதுந்தான்."

"அப்படியா! ரொம்ப சந்தோஷம். கண்டு பிடியுங்கள்.—பழைய மந்திரிகள் மீது மாத்திரம் என்ன? புதிய மந்திரிகள் நான்கு பேர்மீதும் ஏதாவது புகார் இருக்கிறதா என்று கண்டு பிடிக்க வேண்டும். கண்டு பிடித்து, எப்படியாவது இந்த மந்திரி சபையை ஒழித்துவிட்டுத்தான் மறுவேலை பார்க்க வேண்டும். இந்த விஷயத்தில் நான் வேண்டுமானாலும் உங்களுக்கு ஒத்தாசை செய்கிறேன்."

"ரொம்ப சந்தோஷம்!—ஆனால், இதில் ஒரு கஷ்டம் இருக்கிறது. இந்த மந்திரி சபையை ஒழித்துவிட்டால் அடுத்த மந்திரி சபையை யார் அமைப்பது?"

"ஏன், நீங்களே அமைப்பது; நீங்களே பிரதம மந்திரியாக வந்துவிட்டால் போச்சு! உங்களுக்கென்ன திறமை இல்லையா, நிர்வாக அநுபவம் இல்லையா?"

"அப்போது என்மேலேயும் இப்படித்தானே புகார் சொல்வார்கள்?"

"புகார் சொன்னால் ராஜிநாமாச் செய்து விடுவது!"

"இப்படி மந்திரிசபை மாறிக்கொண்டேயிருந்தால் மாகாண நிர்வாகம் கெட்டுக் குட்டிச்சுவராகப் போய்விடுமே; அதைப் பற்றித்தான் நான் யோசிக்கிறேன்."

"அதைப்பற்றி நீங்கள் எதற்காகக் கவலைப் படுகிறீர்கள்? மாகாண நிர்வாகத்தை நான் பார்த்துக் கொள்கிறேன்!"

இதைக் கேட்டதும் ஸ்ரீ பிரகாசத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"நீங்கள் யார்?" என்று அந்தப் பேர்வழியைக் கேட்டார்.

"நானா? நான் உங்களுக்குப் புதியவனல்ல. என்னை மறந்துவிட்டீர்கள் போலிருக்கிறது. கொஞ்ச காலத்துக்கு முன்பு நான் இந்த மாகாணத்தில்தான் இருந்தேன். அப்புறம் இதை விட்டு வெளியேறி வீடு வாசல் இல்லாமல் கொஞ்ச காலம் கஷ்டப்பட்டேன். கடைசியில் இப்போது பாகிஸ்தானில் தஞ்சம் புகுந்திருக்கிறேன். அங்கே சௌக்கியமாக இருக்கிறேன்!"

"உங்கள் பெயர் என்ன?" என்று கேட்டார் ஸ்ரீ பிரகாசம்.

"நான்தான் சாட்சாத் செக்ஷன் 93!" என்று பதில் வந்தது.

ஆந்திரகேசரி பிரகாசம் கற்சிலைபோ அப்படியே ஸ்தம்பித்து நின்றார்!




### பதினெட்டாம் அத்தியாயம்

## பட்டாபியின் வெற்றி

தேவபட்டணம் அல்லோல கல்லோலப்பட்டது. "பட்டாபிராமன் வாழ்க! கறுப்பு மார்க்கெட் வீழ்க!" என்ற கோஷம் மூலை முடுக்குகளிலெல்லாம் எழுந்தது. சின்னஞ்சிறு குழந்தைகள் முதல் தலை நரைத்த வயோதிகர்கள் வரையில் அன்று நடந்த அதிசயத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். கறுப்பு மார்க்கெட் வியாபாரத்தில் கொள்ளைப் பணம் சம்பாதித்த பழைய சேர்மன் இந்தத் தேர்தலிலும் வெற்றிபெறும் நோக்கத்துடன் முப்பதினாயிரம் ரூபாய் வாரி இறைத்திருந்ததாக ஊரெல்லாம் பிரஸ்தாபமாயிருந்தது. வோட்டு ஒன்றுக்கு நூறு ரூபாய் வரையில் விலை கொடுத்து வாங்கப் பழைய சேர்மன் பிரம்மப் பிரயத்தனம் செய்ததாகச் சொல்லிக் கொண்டார்கள். ஆனாலும் அவருக்கு எதிராக நின்ற பட்டாபிராமன் பெரும்பான்மை வோட்டுக்கள் பெற்று வெற்றி அடைந்தான். பொதுஜன அபேட்சகராகிய பட்டாபிராமன் வெற்றி அடைந்தது பற்றித் தேவபட்டணத்துப் பொது மக்கள் எல்லாரும் அளவிலாத ஆனந்தமடைந்தார்கள். பல விதங்களிலும் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்கள். பட்டாபிராமன் வெற்றி பெற்றதாக வோட்டு முடிவு வெளியானவுடனே ஜயகோஷங்கள் வானளாவ எழுந்தன. பூக்கடைகளில் தொங்கிய மலர் மாலைகள் எல்லாம் அரைமணி நேரத்தில் பட்டாபிராமனுடைய கழுத்தில் வந்து விழுந்தன. "பட்டாபிராமன் எங்கே?" என்று கேட்கும்படியாகப் பூமாலைகள் அவனுடைய தலைக்குமேலே எழுந்து அவன் முகத்தையே மறைத்து விட்டன. முன் ஏற்பாடு எதுவும் இல்லாமலே ஊர்வலம் ஒன்று ஆரம்பமாயிற்று. திறந்த மோட்டார் வண்டி ஒன்றில் பட்டாபிராமனைப் பலவந்தமாகப் பொதுஜனங்கள் ஏற்றிவைத்தார்கள். எங்கிருந்தோ நாதஸ்வர வாத்தியமும் பாண்டு கோஷ்டியும் வந்து சேர்ந்தன. ஊர்வலம் தேவபட்டணத்து வீதிகளில் எல்லாம் சாவகாசமாகச் சுற்றி

வந்து, கடைசியில் பட்டாபிராமனுடைய வீட்டில் அவனைக் கொண்டு வந்து விட்ட பிற்பாடு கலைந்தது.

பொது ஜனங்கள் எல்லாரும் போன பிற்பாடு சில ஆப்த நண்பர்களும் பிரமுகர்களும் பட்டாபிராமனைப் பின் தொடர்ந்து வீட்டுக்குள்ளே வந்தார்கள். பட்டாபிராமனுடைய வீட்டிலிருந்த நாற்காலிகளில் எல்லாம் அவர்கள் உட்கார்ந்தும் இடம் போதாமல் பலர் ஜன்னல் விளிம்புகளிலும் உட்காரவேண்டியிருந்தது. ஒவ்வொருவரும் தனித்தனியே பட்டாபிராமனைப் பாராட்டினார்கள். "பட்டாபிராமன் சேர்மன் ஆவது நிச்சயம்" என்று சபதம் கூறினார்கள். சில பெரியவர்கள் வயதின் உரிமை எடுத்துக்கொண்டு, "மிஸ்ஸஸ் பட்டாபிராமன் எங்கே?" என்று கேட்டார்கள். சந்தோஷம் ஒரு பக்கமும் சங்கோசம் ஒரு பக்கமும் பிடுங்கித் தின்ன, ஸ்ரீமதி லலிதா அங்கே வந்து சேர்ந்தாள். "இந்த வெற்றியெல்லாம் உங்களுடைய அதிர்ஷ்ட பலத்தினாலேதான்!" என்று லலிதாவைப் பார்த்துத் தனித்தனியாகப் பலர் உபசாரம் சொன்னார்கள்.

லலிதா அங்கிருந்து போன பிறகு ஒருவர், "அந்த அம்மாளுக்கு உடம்பு எப்படி இருக்கிறது?" என்று கேட்டார். பட்டாபிராமனுடைய முகம் சுருங்கிற்று. "அவ்வளவாகப் பரவாயில்லை!" என்று சொன்னான்.

"சீதா அம்மாளைப் பற்றித்தானே கேட்கிறீர்கள்? அவருடைய உடம்புக்கு என்ன வந்தது? மனதுதான் ரொம்பவும் நொந்து போயிருக்கும்!" என்றார் இன்னொரு நண்பர்.

"பொது வாழ்க்கை என்றால் இந்த மாதிரி எத்தனையோதான் இருக்கும். வம்புக்காரர்களுடைய பொய்களுக்கெல்லாம் பயந்து விடவும் கூடாது; மனதைச் சோர்வடைய விட்டுவிடவும் கூடாது!" என்றார் எதிர் வீட்டுத் தாமோதர முதலியார்.

"மிஸ்டர் பட்டாபிராமன்! நீங்கள்தான் சீதா அம்மாளுக்குத் தைரியம் சொல்லித் தேற்றவேண்டும்" என்றார் அட்வகேட் அப்பா ராவ்.

"என்ன இருந்தாலும் இந்த மாதிரி அயோக்யத்தனமாகவா அவதூறு சொல்கிறது? எனக்கு என்னமோ நினைத்தாலே இரத்தம் கொதிக்கிறது!" என்றான் பட்டாபிராமன்.

"அப்பா, பட்டாபி! அப்படியெல்லாம் இரத்தத்தைக் கொதிக்கும்படி விட்டுவிடாதே! நீ எலெக்ஷனுக்கு நிற்க உத்தேசித்த போதே நான் உனக்கு எச்சரிக்கை செய்யவில்லையா? எலெக்ஷன் என்றால் இப்படித்தான் குப்பை கூளம் எல்லாம் வெளியில் வரும். அதற்காக ஆஹா ஊஹூ என்று அலறுவதில் பிரயோசனமில்லை!" என்று சொன்னார் தாமோதர முதலியார்.

"அதெல்லாம் இல்லை, ஸார்! இந்த மாதிரி காலிப் பயல்களைச் சும்மா விட்டு விடக் கூடாது. துண்டுப் பிரசுரம் போட்டவனைக் கோர்ட்டுக்கு இழுத்துச் சந்தி சிரிக்க அடிக்கவேண்டும்!" என்றார் ஒரு ஆக்ரோஷக்காரர்.

"கோர்ட்டுக்குப் போவது பிசகு. அவதூறு கேஸுகளில் ருஜுப் செய்வது எவ்வளவு கஷ்டம் என்பது நமக்குத் தெரியாதா என்ன? பேசாமல் 'பினீத் கண்டெம்ட்' என்று விட்டு விடுவதுதான் சரி!" என்றார் அட்வகேட் அப்பா ராவ்.

"அதுதான் ஸார், சரி! சந்திரனைப் பார்த்து நாய் குரைத்தால் சந்திரனுக்கு என்ன குறைவு வந்து விடும்?" என்றார் ஒரு சாந்தமூர்த்தி.

"நமக்கு அப்படித் தோன்றுகிறது. ஆனால் சந்திரனுக்கு என்ன தோன்றுகிறதோ, என்னமோ!" என்றார் ஒரு ஹாஸ்யப் பிரியர்.

கடைசியாக, பட்டாபிராமன் அவனுடைய மகத்தான வெற்றியைக் குடும்பத்தோடு சேர்ந்து அனுபவிக்கட்டும் என்று விட்டுவிட்டு எல்லாரும் போய்ச் சேர்ந்தார்கள்.

மேற்கூறிய சம்பாஷணையில் சீதாவைப் பற்றிக் கூறப்பட்ட அநுதாப வார்த்தைகள் வாசகர்களுக்கு அவ்வளவாக விளங்காமலிருக்கலாம். விஷயம் என்னவென்று கேட்டால்:—

வோட்டுப் போடும் தினத்துக்கு முதல் நாளைக்கு முன்னாள் பட்டாபிராமனை ஆதரித்துக் கடைசிப் பெரும் பொதுக்கூட்டம் நடந்தது. கேவலம் முனிஸிபல் தேர்தல் கூட்டங்களில் சாதாரணமாகக் கண்டிராத பெருங்

கூட்டம் கூடியிருந்தது. சுமார் ஐயாயிரம் பேர் இருக்கும். மேடையில், அபேட்சகர் பட்டாபிராமனோடு இன்னும் பல பிரமுகர்களும் பெண்மணிகளும் அமர்ந்திருந்தார்கள். பெண்மணிகளிலே சீதாவும் இருந்தாள். சென்ற ஒன்றரை மாதமாகத் தேர்தல் வேலை செய்ததில் சீதா பிரமாதமான பிரசங்கி ஆகிவிட்டாள். அவளுடைய பேச்சிலே தேசபக்தி ததும்பிற்று; ஆவேசம் பொங்கிற்று; வீர சுதந்திரம் தாண்டவ நர்த்தனம் செய்தது; கறுப்பு மார்க்கெட் சின்னாபின்னமடைந்தது; அக்கிரமமும் அநீதியும் அதோகதி அடைந்தன. பட்டாபிராமனை ஆதரித்த சீதாவின் வார்த்தைகள் அன்பும் ஆர்வமும் உருக் கொண்டவையாக வெளிவந்தன. எதிரி அபேட்சகரைத் தாக்கிய அவளுடைய சொற்களோ இராம பாணங்களைப் போல் விர்ரென்று பாய்ந்து சென்று அக்கிரமத்தின் உயிர் நிலையில் தைத்தன.

ஆகையால் சபையோர் எல்லோரும் வீராங்கனையான ஸ்ரீமதி சீதாதேவி எப்போது பேசப் போகிறாள் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பது வழக்கமாகி விட்டது. மற்றவர்களுடைய பேச்சுகளையெல்லாம் ஏதோ சகித்துக் கொண்டிருந்தார்கள் என்று தான் சொல்லவேண்டும்.

ஆனால் கடைசியாக நடந்த பெரும் பொதுக் கூட்டத்தின் போது சபையோர் பெரும் ஏமாற்றம் அடையும்படி நேர்ந்தது. ஏனெனில் ஸ்ரீமதி சீதாவின் பேச்சு அன்று நடைபெறவில்லை. வழக்கம்போல் சீதா பேச எழுந்தது என்னமோ உண்மைதான். ஆனால் மூன்று நாலு வாக்கியங்களுக்கு மேல் பேசவில்லை; பேச முடியவில்லை. அந்த மூன்று நாலு வாக்கியங்களையும் சீதா விம்மலுடன் பேசினாள். பிறகு குபீரென்று பெரிய அழுகையாக வந்து விட்டது. எனவே பேச்சை நிறுத்திக் கொண்டு உட்கார்ந்து விட்டாள். நல்ல வேளையாகக் கூட்டத்தில் குழப்பம் எதுவும் ஏற்படாமல் மேடையில் இருந்த பிரமுகர்களும் ஸ்திரீகளும் அங்கிருந்து கலைந்துபோக முடிந்ததைப் பற்றியே அனைவரும் சந்தோஷப்பட வேண்டியதாயிற்று.

சீதாவின் விபரீத நடவடிக்கைக்குக் காரணமாயிருந்தது இதுதான்;—

அன்று பொதுக் கூட்டம் நடந்து கொண்டிருந்தபோது ஜனக் கூட்டத்தின் ஓரப் பக்கங்களில் யாரோ ஒருவன் ஒரு துண்டுப் பிரசுரத்தை விநியோகித்தான். அதைக் கையில் வாங்கிப் படித்தவர்கள் எல்லாரும் மேடை மீதிருந்த சீதாவை உற்றுப் பார்க்கலானார்கள். மேற்படி துண்டுப் பிரசுரங்கள் கை மாறி மாறிக் கூட்டத்தில் பரவிக் கொண்டேயிருந்தன. அநேகருடைய கவனம் மேடையில் நின்று பேசுகிறவர்கள் மீதோ அவர்களுடைய பேச்சிலோ செல்லவேயில்லை. திரும்பத் திரும்பச் சீதாவையே அவர்கள் நோக்கிக் கொண்டிருந்தார்கள். சிலருடைய நோக்கில் பரிதாபம் இருந்தது; சிலருடைய பார்வையில் ஆத்திரம் அதிகம் இருந்தது; வேறு சிலருடைய பார்வையில் ஏளனமும் கலந்திருந்தது.

இப்படிக் கூட்டத்தில் பலர் ஏதோ ஒரு பிரசுரத்தைப் பார்ப்பதும் பிறகு தன்னைப் பார்ப்பதுமாயிருந்ததைச் சீதாவும் சிறிது நேரத்தில் கவனிக்கும்படி நேர்ந்தது. இன்னது என்று விளக்கமில்லாத கவலையும் பீதியும் அவள் மனதில் உதித்தன. அந்தப் பிரசுரத்தை வாங்கிப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வமும் உண்டாயிற்று. இந்தச் சமயத்தில் பிரசுரத்தை விநியோகித்தவன் பிரசங்க மேடைக்கு அருகில் வந்து அதை விநியோகிக்கத் தொடங்கினான். அப்படி விநியோகிக்கக் கூடாதென்று சிலர் ஆட்சேபித்தார்கள். அந்தப் பையன் நாலு துண்டுப் பிரசுரங்களை மேடையில் எறிந்து விட்டு ஓட்டம் பிடித்தான்.

கை மாறி மாறி ஒரு பிரசுரம் சீதாவுக்குப் பக்கத்தில் வந்து சேர்ந்தது. சீதா அதைக் கை நீட்டி வாங்கிக் கொண்டாள்; வாங்கிப் படிக்கவும் தொடங்கினாள். முதல் நாலைந்து வரிகளைப் படித்ததுமே அவளுடைய நெஞ்சில் ஈட்டியைப் பாய்ச்சுவது போலிருந்தது. மேலே படித்ததும் இருதயம் வெடித்துவிடும் போல் தோன்றியது. படித்து முடித்ததும் உடம்பெல்லாம் ஆயிரம் தேள்கள் கொட்டினாற் போன்ற துன்பம் உண்டாயிற்று. துன்பத்தோடு கலந்து சொல்ல முடியாத கோபமும் ஆத்திரமும் எழுந்தன.

அந்தத் துண்டுப் பிரசுரத்தில் சீதாவைப் பற்றி அவ்வளவு நிந்தனையாக எழுதியிருந்தது. அவளுடைய ஒழுக்கத்தைக் குறை கூறியிருந்தது. அவள் தன் புருஷனை விட்டுவிட்டு அம்மாஞ்சி சூரியாவோடு ஓடிவந்தவள் என்று எழுதியிருந்தது. அவள் தேசத் தொண்டில் சிறை புகவில்லையென்றும் ரயிலில் திருடியதற்காகத் தண்டிக்கப்பட்டவள் என்றும் கண்டிருந்தது. அப்படிப்பட்ட ஜாலக்காரியின் மாயப் பேச்சில் மயங்கும் முட்டாள்களுக்கு நன்றாக டோஸ் கொடுத்து விட்டு அந்தத் துண்டுப் பிரசுரம் முடிவுற்றது.

ஒரு பெண்ணின் மனதைப் பாதித்து வேதனைக்குள்ளாக்குவதற்கு வேறு என்ன வேண்டும்? வேதனையிலிருந்து பொங்கி எழுந்த ஆத்திரம் காரணமாகச் சீதா பேச எழுந்தாள். அந்தத் துண்டுப் பிரசுரத்தைக் குறிப்பட்டு அதைச் சின்னாபின்னமாக்கி அதை எழுதியவனுடைய மதியீனத்தை அம்பலப்படுத்த வேண்டும் என்று ஆவேசத்துடன் பேச ஆரம்பித்தாள். அவளுடைய நோக்கம் நிறைவேறவில்லை. நாலைந்து வாக்கியங்கள் பேசுவதற்குள்ளேயே அழுகை பீறிக்கொண்டு வந்தபடியால் பேச்சை நிறுத்திவிட்டு உட்காரும்படி நேர்ந்தது. அந்த இரண்டு நாளும் சீதா வெளிக்கிளம்பவேயில்லை. கேட்டவர்களுக்கெல்லாம் பட்டாபிராமன் சீதாவுக்கு உடம்பு சரியில்லை என்று பதில் சொல்லிக் கொண்டு வந்தான்.

மேற்படி சம்பவத்தினால் பட்டாபிராமனுடைய மனமும் பெரும் வேதனை அடைந்திருந்தது. கோபமோ சொல்ல முடியாமல் வந்தது. எனினும் எலெக்ஷன் முயற்சியில் அவன் சோர்ந்து விடவில்லை. மேற்படி சம்பவம் தேர்தலில் வெற்றி பெறுவதில் அவனுடைய ஆத்திரத்தை அதிகமாக்கி விட்டது.

அம்மாதிரியே பட்டாபிராமனுக்கு வேலை செய்தவர்களும் அதிக ஊக்கம் கொண்டார்கள். இந்தத் தேர்தலில் ஜெயிக்காவிட்டால் தங்கள் மானமே போய் விடும் என்றும் பிறகு தேவபட்டணத்துப் பொது வாழ்க்கையில் தாங்கள் தலைகாட்ட முடியாதென்றும் அவர்கள் எண்ணி முன்னைவிட ஆவேசமாக வேலை செய்தார்கள்.

பொது ஜனங்கள் — வோட்டர்கள் மனதில் மேற்படி துண்டுப் பிரசுரம் எந்தவித மாறுதலையும் உண்டாக்கவில்லை. பொது ஜனங்களை முட்டாள்கள் என்று சொல்லி யாராவது அவர்களுடைய ஆதரவைப் பெற முடியுமா? வேறு என்ன விதமாகத் தங்களைத் திட்டினாலும் பொது ஜனங்கள் பொறுத்துக் கொள்வார்கள். ஆனால் "நீங்கள் முட்டாள்கள்" என்று சொல்லி யாரும் அவர்களுடைய ஆதரவைப் பெறலாம் என்று எதிர்பார்க்க முடியாது! "நாங்களா முட்டாள்கள்? துண்டுப் பிரசுரம் எழுதிய நீதான் முட்டாள் என்பதை நிரூபித்து விடுகிறோம்!" என்று தேவபட்டணம் பொது ஜனங்கள் தீர்மானித்தார்கள். மேலும், கறுப்பு மார்க்கெட்டில் பணம் சேர்த்த பழைய பெருச்சாளி இப்படியெல்லாம் ஒரு பெண்ணைப் பற்றி அவதூறைக் கிளப்பிவிட்டுத் தன்னுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ளப் பார்க்கிறான் என்ற அபிப்பிராயமும் பொது மக்களிடையே பரவியது. அந்தப் பொதுஜன அபிப்பிராயத்தையே வோட்டுக்களும் பிரதிபலித்தன. முடிவில், பட்டாபிராமன் பெரும் வெற்றி அடைந்தான்.

அந்த மகத்தான வெற்றியானது பட்டாபிராமனுக்கு நியாயமாக அளித்திருக்க வேண்டிய ஆனந்தத்தை அளிக்கவில்லை. 'தெள்ளிய பாலில் சிறிது நஞ்சையும் சேர்த்து விட்டது' போல் அவனுடைய வெற்றிக் குதூகலத்தைச் சீதாவைப் பற்றிய அவதூறுப் பிரசாரம் பாதித்து விட்டது! யாருடைய தூண்டுதல் அந்த எலெக்ஷனில் தான் நிற்கும்படியான ஊக்கத்தை அளித்ததோ, யாருடைய மகத்தான முயற்சி தன்னுடைய வெற்றிக்குக் காரணமாயிருந்ததோ, யார் தனக்குச் சோர்வு ஏற்பட்ட போதெல்லாம் ஆறுதல் கூறி உற்சாக மூட்டி வந்தாளோ, அத்தகைய சீதா வெற்றிக் கொண்டாட்டக் குதூகலத்தைத் தன்னுடன் பகிர்ந்து அனுபவிக்க முடியவில்லை. இரண்டு நாளாக மச்சு மேலிருந்து கீழ இறங்காமலேயே இருந்து வருகிறாள். சீதாவும் சேர்ந்து கொண்டாட முடியாத இந்த வெற்றியினால் என்ன பிரயோஜனம்? நாளைக்

குத் தனக்குச் சேர்மன் பதவி கிடைத்தால்தான் என்ன சந்தோஷம் ஏற்பட்டு விடப்போகிறது? தன்னுடன் பகிர்ந்து அனுபவிப்பதற்குச் சீதா இல்லாவிட்டால் என்ன கௌரவம் கிடைத்துத்தான் என்ன பயன்?

இவ்விதம் பட்டாபிராமன் மனச் சோர்வுக்கு ஆளாகியிருந்த போது லலிதா தன்னுடைய தாயாருடன் பட்டாபிராமனின் ஆபீஸ் அறைக்கு வந்தாள். பட்டாபிராமன் வெற்றியடைந்ததில் அவனுடைய மாமியாரைப்போல் சந்தோஷமடைந்தவர் வேறு யாரும் இருக்க முடியாது! முதல் தடவையாக மாப்பிள்ளையிடம் சங்கோசத்தை விட்டுச் சரஸ்வதி அம்மாள் கலகலப்பாகப் பேசினாள். சந்தோஷத்தைப் பலவிதத்திலும் தெரிவித்த பிறகு, "இந்த வைபவத்தையெல்லாம் பார்க்க அவர் இல்லாமற் போய் விட்டாரே என்று நினைத்தால் மட்டும் மனது வேதனைப் படுகிறது!" என்று சொல்லிக்கொண்டு இரண்டு சொட்டுக் கண்ணீர் விட்டாள். உடனே, இந்த சந்தோஷமான வேளையில் அசட்டுத்தனமாகத் துக்க சமாசாரத்தைப் பிரஸ்தாபித்து விட்டதற்காக வெட்கப்பட்டவளாய் விரைந்து சமையற்கட்டுக்குப் போய் விட்டாள்.

"நீங்கள் என்ன வேணுமோ சொல்லுங்கள்; அம்மாவுக்கு உங்கள் பேரில் உள்ள பாசம் வேறு யாரிடமும் கிடையாது!" என்றாள் லலிதா.

"யார் இல்லை என்றார்கள்? உன் அம்மாவுக்கு என்பேரில் ரொம்பப் பாசந்தான். ஆனால் அந்தப் பாசம் எனக்குப் பிராண சங்கடமாயிருக்கிறது!" என்றான் பட்டாபிராமன்.

"அது போனால் போகட்டும். சீதா இப்படி இரண்டு நாளாகப் படுத்த படுக்கையாக இருக்கிறாள். நீங்களும் எலெக்ஷன் மும்முரத்தில் இருந்து விட்டீர்கள். இப்போதாவது மாடிக்குப் போய் அவளுக்குச் சமாதானம் சொல்லிவிட்டு வரலாம், வாருங்களேன்!" என்றாள் லலிதா.

"என்ன சமாதானத்தைச் சொல்வது? வீண் பிடிவாதத்துக்கு நாம் என்ன செய்ய முடியும்? யாரோ வழியிலே போகிறவன் என்னமோ பிதற்றினான் என்பதற்காகக் குப்புறப் படுத்து ஓயாமல் அழுது கொண்டிருக்கிறதா? என்ன இருந்தாலும் பெண் பிள்ளை என்பது சரியாயிருக்கிறது. இப்படிப்பட்ட கோழை மனதுள்ளவர்கள் பொது வேலைக்கு வரவே கூடாது!" என்றான் பட்டாபிராமன்.

"சூரியாவும் அன்றைக்கு அப்படித்தான் சொன்னான். எலெக்ஷன் தொல்லைக்குப் பெண் பிள்ளைகள் போகக் கூடாது என்றான்..."

"சூரியா என்ன உளறினால் இப்போது என்ன? அவன் என்னை எலெக்ஷனுக்கே நிற்கக்கூடாது என்று சொன்னான். நின்றதனால் என்ன குடிமுழுகிப் போய் விட்டது? இன்றைக்கு ஊரெல்லாம் 'ஜே' கோஷம் செய்கிறதா, இல்லையோ?" என்று பட்டாபி கர்வம் ததும்பப் பேசினான்.

"அதற்கு என்ன ஆட்சேபணை? வெறுமனேயா ஜயகோஷம் செய்கிறார்கள்? 'பட்டாபிராமனுக்கு ஜே!' என்றுதான் கோஷிக்கிறார்கள்! நம்முடைய கலியாணத்தன்று எல்லாரும் என்னைப் பிடிவாதம் செய்ததின்பேரில் 'மாமவ பட்டாபிராமா' என்று நான் பாடினேன். அது இன்றைக்குத்தான் நிஜமாயிற்று. இன்றுதானே உங்களுக்குப் பட்டாபிஷேகம்!" என்று லலிதா அன்பு ததும்பப் பதில் கூறினாள்.

"சரி சரி! நீ உன்னுடைய பழைய பெருமையைப் பீத்திக்கொள்ள ஆரம்பித்து விட்டாயாக்கும்! இன்னும் எனக்குப் பட்டாபிஷேகம் ஆகவில்லை. இன்றைக்குத் துவஜாரோகணந்தான் நடந்திருக்கிறது. சேர்மன் வேலையும் கிடைத்த பிறகுதான் பட்டாபிஷேகம் நடந்தது என்று சொல்லலாம்."

"அதற்கு என்ன பிரமாதம்? இது ஆனதுபோல் அதுவும் ஆகி விடுகிறது! என் வாக்குப் பொய்யாகாது; நீங்கள் வேணுமானால் பாருங்கள்!"

"ரொம்ப லட்சணந்தான். உன்னுடைய திருவாக்கின் மகிமையினாலேதான் எனக்குத் தேர்தலில் வெற்றி கிடைத்தது என்று உன் எண்ணமாக்கும்! எலெக்ஷனுக்கே நான் நிற்கக் கூடாது என்று நீ முரண்டு பிடித்ததை மறந்து விட்டாயாக்கும்! அந்தச் சமயம் சீதா மட்டும் என்னுடைய கட்சியில் நின்று பேசியிரா விட்டால்......"

"அதைப்பற்றி யார் என்ன சொன்ஞர்கள்? சீதா அத்தங்கா இந்தத் தேர்தலில் நமக்குச் செய்த ஒத்தாசையை மறக்க முடியுமா?"

"அப்படியொன்றும் உன் அத்தங்கா பிரமாத ஒத்தாசை எனக்குச் செய்து விடவில்லை. அவள் இல்லாவிட்டால் நான் ஜயித்திருக்க மாட்டேன் என்கிருயா?"

"அழகாய்த்தா னிருக்கிறது! நான் அப்படிச் சொல்வேனு என்ன? உங்களுடைய தியாகத்தினுலும் செல்வாக்கினுலும் நீங்கள் ஜயித்தீர்கள். அதைப் பற்றிச் சந்தேகமில்லை. ஆனுல் சீதா அத்தங்காவும் எவ்வளவோ பாடுபட்டு ஒத்தாசை செய்திருக்கிருள். அதை நாம் மறக்கக் கூடாது. கொஞ்சம் மேலே போய் அத்தங்காவைப் பார்த்து விட்டு வரலாம், வாருங்கள். நீங்கள் இரண்டு வார்த்தை 'உன்னுல்தான் ஜயித்தேன்' என்று சொல்வதினுல் மோசம் முழுகிப் போய்விடாது. அவளுக்குத் திருப்தியா யிருக்கும்."

"அவளுடைய திருப்திக்காகவா நான் ஜன்மம் எடுத்திருக்கிறேன்? அதெல்லாம் முடியாத காரியம். ஊரெல்லாம் திரண்டு வந்து ஊர்வலம் நடத்தி எனக்கு வாழ்த்துச் சொல்லிவிட்டுப் போயிருக்கிருர்கள். வீட்டுக்குள்ளேயிருந்துகொண்டு இவளுக்கு மச்சுப் படி இறங்கி வரக்கூட முடியவில்லை! அவள் இறங்கி வந்தால் வரட்டும்; வராவிட்டாற் போகட்டும். நான் போய் அவளுடைய மூகவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டு கெஞ்ச முடியாது! தெரிகிறதா?"

இப்படிப் பட்டாபிராமன் ஆத்திரமாய்ப் பேசிக்கொண் டிருக்கும்போதே யாரோ மச்சுப்படி இறங்கி வரும் சத்தம் கேட்டது. உடனே அந்தத் தம்பதிகள் பேச்சை நிறுத்தினுர்கள். இரண்டு நிமிஷத்துக் கெல்லாம் சீதா அறைக்குள்ளே பிரவேசித்தாள்.

"அத்தங்கா! உனக்கு நூறு வயது!" என்ருள் லலிதா.

"வாருங்கள்! வாருங்கள்! இப்போதுதான் மாடிக்கு வந்து உங்களைப் பார்க்கலாம் என்று பேசிக் கொண் டிருந்தோம். அதற்குள் நீங்களே இறங்கி வந்து விட்டீர்கள். தலைவலி




இப்போது எப்படி யிருக்கிறது?" என்ருன் பட்டாபிராமன்.

"உங்களுடைய வெற்றிச் செய்தி கேட்டதும் தலைவலி பறந்து போய் விட்டது! ரொம்ப சந்தோஷம்!" என்ருள் சீதா.

"எல்லாம் நீங்கள் கொடுத்த ஊக்கத்தினுலும் செய்த ஒத்தாசையினுலுந்தான். உங்களுக்கு ரொம்பவும் கடமைப் பட்டிருக்கிறேன்!" என்ருன் பட்டாபிராமன்.

"நான் என்ன அப்படிப் பிரமாத ஒத்தாசை செய்து புரட்டி விட்டேன்? லலிதாவின் அதிர்ஷ்டத்துக்கு எல்லாம் தானே நடக்கும்!" என்று சீதா சொல்லி விட்டு லலிதாவின் கன்னங்களைத் தடவிக் கொடுத்துத் திருஷ்டி கழிக்கும்



பாவனையாக நெற்றியில் கையை வைத்து தெரிந்துக் கொண்டாள்.

லலிதாவுக்கு ஆனந்தமா யிருந்தது. சீதா மலர்ந்த முகத்துடன் எழுந்து வந்ததை நினைத்துக் களிப்படைந் தாள். தன் கணவரோ சற்று முன் கடுமையாகப் பேசியதை மறந்து அவ ளிடம் மரியாதையாகப் பேசுகிறார். பட்டாபிராமனுடைய வெற்றியினால் லலிதாவுக்கு ஏற்பட்ட குதூகலம் இப்போது பூர்த்தியாகி விட்டது.

"அத்தங்கா! இந்த மனுஷருடைய பேராசையைக் கேள்! இவருக்கு இந்த எலெக்ஷனில் வெற்றி கிடைத்தது போதாதாம். சேர்மன் பதவியும் கிடைத்தால்தான் சந்தோஷப் படலா மாம்!" என்றாள் ஸ்ரீமதி லலிதா.

"உன் அதிர்ஷ்டத்துக்கு அதுவும் தானே நடக்கிறது!" என்றாள் சீதா.

அப்போது பட்டாபி குறுக்கிட்டு, "இவள் சொல்கிறதை நீங்கள் நம்பா தீர்கள். இவளுக்கு 'சேர்மன் ஒயிப்' என்று தன்னை எல்லாரும் கொண் டாட வேண்டும் என்று ஆசையா யிருக்கிறது. அந்தப் பழியை என் தலையின் பேரில் போட்டுவிடப் பார்க் கிறாள்!" என்று சொன்னான்.

"லலிதா அப்படி ஆசைப்படுவதில் என்ன தவறு? எனக்குக்கூடத்தான் நீங்கள் சேர்மன் ஆகிப் பார்க்கவேண் டும் என்று ஆசையா யிருக்கிறது!" என்று பரிவுடன் கூறினாள் சீதா.

"அந்த ஆசை நிறைவேற வேண்டு மானால் நீங்கள் முன்போல் எனக்கு

உதவி செய்ய வேண்டும். மாடியிலே போய்ப் படுத்துக்கொள்ளக்கூடாது."

"இனிமேல் என்றால் உங்களுக்கு உபகாரம் கிடையாது. ஒரு வேளை அபகாரம் நேர்ந்தாலும் நேரும். இரண்டு நாளாக நான் தீவிரமாக யோசனை செய்து பார்த்தேன். ஸ்திரீகள் எலெக்ஷன் முதலிய பொதுக் காரியங்களில் தலையிடவே கூடாது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். பொதுஜனங்கள் ரொம்பப் பொல்லாதவர்கள்!" என்றாள் சீதா.

"நீங்கள் சொல்வது சுத்தத் தப்பு. இன்றைக்கு என்னை வாழ்த்துக் கூற வந்தவர்கள் எல்லாரும் தங்களைப் பற்றி அன்புடன் விசாரித்தார்கள். ஒருவராவது தவறாக ஒரு வார்த்தையும் சொல்லவில்லை."

"இன்றைக்கு ஒன்றும் சொல்லியிருக்க மாட்டார்கள். ஆனால் நாளைக்குச் சொல்வார்கள்."

"பொது ஜனங்கள் பேரில் ஏன் உங்களுக்கு இவ்வளவு அவநம்பிக்கையோ தெரியவில்லை. எவனோ ஒரு காலிப் பயல் என்னமோ பிதற்றினால் அதற்காக எல்லாரையும் சேர்த்துக் குறை சொல்லலாமா?"

"அந்த நோட்டீசை நீங்கள் பார்த்தீர்களோ என்னமோ, தெரியவில்லை. பார்த்திருந்தால் உங்களுக்கும் என்னைப் போல் இரத்தம் கொதித்திருக்கும். அம்மாதிரி யெல்லாம் எழுதிய வனை வெட்டிப் போட்டு விடலாம் என்று தோன்றி யிருக்கும்!"

இந்தச் சமயத்தில் லலிதா குறுக்கிட்டு, "போதும் இந்தப் பேச்சு! சந்தோஷகரமான சமயத்தில் அந்த அக்கிரமத்தைப் பற்றி எதற்காகப் பேசவேண்டும்? சாப்பிடப் போகலாம், வாருங்கள்!" என்றாள்.

மூன்று பேரும் சாப்பிடுவதற்குப் போனார்கள். சாப்பிடுகிறபோது சிரிப்பும் விளையாட்டுமாக இருந்தது.

உணவு அருந்தியதும் சீதா மச்சு அறைக்கும் பட்டாபிராமன் வாசல் திண்ணைக்கும் போனார்கள். பிறகு சரஸ்வதி அம்மாள் லலிதாவிடம், "இந்தப் பெண் இனிமேல் இங்கே அதிக காலம் இருப்பது நன்றாயிராது. சீக்கிரம் ஊருக்குக் கிளம்பிப் போனால் நன்றாயிருக்கும்!" என்றாள்.

"நன்றாயிருக்கிறதடி, அம்மா, நீ சொல்லுகிறது! காரியம் ஆகிற வரையில் காலைப் பிடி, அப்புறம் எட்டிக் கழுத்தைப் பிடி, என்று சொல்லுவது போல அல்லவா இருக்கிறது? சீதா அத்தங்கா மட்டும் வந்திராவிட்டால் உன் மாப்பிள்ளை எலெக்ஷனுக்கும் நின்றிருக்க மாட்டார்; ஜயித்திருக்கவும் மாட்டார். நீயே எத்தனையோ தடவை அவ்விதம் சொல்லியிருக்கிறாய். இப்போது 'சீதா சீக்கிரம் ஊருக்குப் போனால் தேவலை' என்கிறாயே!"

"அவள் செய்ததை நான் இல்லை என்று சொல்கிறேன்? ஏதோ ஒத்தாசை செய்தாள்; வாஸ்தவந்தான். ஆனால் கடைசியில் பெரிய கல்லாகத் தூக்கிப் போட்டுவிட்டாள்!"

"வீணாகப் பழி சொல்லாதே! அவள் என்ன செய்தாள், பாவம்!"

"அவள் என்ன செய்தாளோ என்னமோ, எனக்கு எப்படித் தெரியும்? புகை உள்ள இடத்தில் நெருப்பு இல்லாமற் போகாது. ஏதோ அவளுடைய நடத்தையில் கல்மஷம் இல்லாமற் போனால் அப்படித் துணிந்து அச்சுப் பிரசுரம் போடுவார்களா?" என்றாள் சரஸ்வதி அம்மாள்.

"அம்மா! அம்மா! அத்தங்காளைப் பற்றி அவதூறு சொல்லாதே! சொன்னால் உனக்குத்தான் பாவம்!"

"நான் சொல்லவில்லையடி, அம்மா, நான் சொல்லவில்லை! என் வாயை வேணுமானால் நீ மூடலாம்; ஊர் வாயை மூட முடியுமா? அடுத்தபடி இன்னொரு பெரிய வேலை இருக்கிறதே, சேர்மன் வேலை, அது மாப்பிள்ளைக்கு ஆகவேண்டுமே என்று எனக்குக் கவலையாயிருக்கிறது. சீதா நல்ல எண்ணம் உள்ளவளாயிருந்தால் இரண்டு நாளில் கிளம்பிப் போய்விடுவதுதான் நியாயம். அவளுக்கும் ஒரு புருஷன் இருக்கிறான், ஒரு குழந்தையும் இருக்கிறாள், அல்லவா? அசல் வீட்டிலேயே இவள் வந்து உட்கார்ந்து கொண்டிருந்தால், குடும்பம் என்ன ஆகிறது? நீ இப்படிப் போய் இன்னொருவர் வீட்டில் இருப்பாயா? யோசித்துப் பார்!" என்றாள் சரஸ்வதி அம்மாள். அம்மா சொல்வதிலும் கொஞ்சம் உண்மை இருக்கிறது என்று லலிதாவுக்குத் தோன்றியது.

# ★ ★ ★ திருமணம் ★ ★ ★

"கல்கி" பத்திரிகையை வாரந்தோறும் படிக்கும் பல்லாயிரக் கணக்கான சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் ஒரு மகிழ்ச்சிகரமான குடும்ப நிகழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம்.

நிகழும் வைகாசி மாதம் 2உ (மே மீ 15உ) சுபதினத்தில் "கல்கி" ஆசிரியரின் குமாரி சௌபாக்கியவதி ஆனந்திக்கும், "கல்கி" மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ டி. சதாசிவம் அவர்களின் மருமான் சிரஞ்சீவி ராமச்சந்திரனுக்கும் திருமணம் இனிது நடந்தேறியது.

இந்தத் திருமண வைபவத்துக்குச் சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரலும் "கல்கி" குடும்பத்தாரின் பரிபூரண பக்திக்கு உரியவருமான மேன்மை தங்கிய ராஜாஜி அவர்கள் விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்தார்கள். "கல்கி" ஆசிரியரின் புதல்விக்கு 'ஆனந்தி' என்று பெயர் சூட்டிய ராஜாஜி அவர்களும், அவருடைய திருக்குமாரி ஸ்ரீமதி நாமகிரி அவர்களும் இந்தத் திருமணத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்ததைப் பெறற்கரும் பாக்கியமாகக் கருதிப் போற்றி மகிழ்கிறோம்.

மற்றும், திருமண வைபவத்துக்கும் மாலையில் நடந்த சிற்றுண்டி விருந்துக்கும் இசைக் கச்சேரிகளுக்கும் விஜயம் செய்த பிரமுகர்கள் :—

சென்னைக் கவர்னர் பவநகர் மகாராஜா, பவநகர் மகாராணி, பிரதமர் கனம் குமாரசாமி ராஜா, ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், திருப்புகழ் மணி கிருஷ்ணசாமி ஐயர், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜ நாடார், ஸ்ரீ தேவதாஸ் காந்தி, ஆஸ்தான கவிஞர் ராமலிங்கம் பிள்ளை, கனம் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், கனம் பக்தவத்ஸலம், கனம் மாதவ மேனன், ஸ்ரீமதி மாதவ மேனன், கனம் பெருமாள்சாமி ரெட்டியார், சபா நாயகர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை, எட்டயபுரம் மகாராஜா, ராஜா ஸர் முத்தையா செட்டியார், மேயர் ராமசாமி நாயுடு, ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை, பத்திரிகாசிரியர்களான ஸ்ரீ கே. சீனிவாசன், ஸ்ரீ எஸ். எஸ். வாஸன், ஸ்ரீ இராமநாத் கோயங்கா, ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன், ஸ்ரீ ஏ. என். சிவராமன், ஸ்ரீ காஸா சுப்பாராவ், பேராசிரியர் வ. ரா., வடபாதிமங்கலம் ஸ்ரீ தியாகராஜ முதலியார், ஸ்ரீ எம். சி. வீரபாகுப் பிள்ளை, ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயர், யாழ்ப்பாணம் ஸ்ரீ எஸ். நடேசன், ஸ்ரீமதி நடேசன், ஸ்ரீ சொ. முருகப்பா,—மற்றும் கலைவாணர்களும் இசைவாணர்களும் நண்பர்களும்.

காங்கிரஸ் அக்கிராசனர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யா, ஸ்ரீ திரு. வி. கலியாணசுந்தர முதலியார், கனம் ஸ்ரீ என். கோபாலசாமி ஐயங்கார், கனம் பி. ஜி. கேர், திரு ஆர். கே. ஷண்முகம் செட்டியார், டாக்டர் வரதராஜுலு நாயுடு முதலிய பிரமுகர்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள்.

கான கந்தர்வ சங்கீத சம்ராட் செம்பை வைத்தியநாத பாகவதர் அவர்களின் அமோகமான சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. சங்கீத ரத்ன ஸ்ரீ சௌடய்யா, ஸ்ரீ கல்பாத்தி ராமநாதன், ஸ்ரீ ஆலங்குடி ராமச்சந்திரன் ஆகியவர்கள் பக்க வாத்தியம் வாசித்துச் சிறப்பித்தார்கள்.

கானகலாதர மதுரை மணி ஐயர் அவர்களின் இனிய சங்கீதக் கச்சேரிக்குச் சங்கீத கலாநிதி கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் வயலின் வாசித்துப் பெருமைப் படுத்தினார்கள்.

ஸ்ரீ திருவெண்காடு சுப்பிரமணியப் பிள்ளை அவர்களும் சென்னை ஸ்ரீ நடேசப் பிள்ளை அவர்களும் நாதஸ்வர கான மழை பொழிந்தார்கள்.

திருமணத்துக்கு விஜயம் செய்தவர்களுக்கும் வாழ்த்துச் செய்தி அனுப்பியவர்களுக்கும் மற்றும் பலவகைத் தொண்டு செய்து உதவியவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

"கல்கி" நேயர்கள் அனைவருடைய ஆசியையும் கோருகிறோம்.

# வட்ட மேஜை

## ★ நிம்மதி யில்லை!

"பேனா வீரர்கள்" என்ற கட்டுரையை நன்றாக ரஸித்துப் படித்தேன். அந்தக் கட்டுரையில் எழுதியிருப்பது நூற்றுக்கு நூறு உண்மை.

சம்பள உயர்வு கோரி வேலைநிறுத்தம் செய்யும் சகல தொழிலாளர்களின் போராட்டத்தைப் பற்றியும் ஆதரித்துப் பத்தி பத்தியாகப் பத்திரிகைகளில் நாம் எழுதுகிறோம். ஆனால் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டுள்ள நமது சம்பளம் பஸ் கண்டக்டர்கள் வாங்கும் சம்பளத்தை விடக் குறைவு.

நான் ஒரு தினசரிப் பத்திரிகையில் செய்தி ஆசிரியர் (News Editor) வேலை பார்க்கிறேன். எனக்கு மாதம் பஞ்சப்படி சகல படிகளும் உள்பட, சம்பளம் ரூபாய் நூறுதான்!

பத்திரிகைகளின் அந்தஸ்து உயர்ந்திருப்பதை ஒட்டி உதவி ஆசிரியர்களும் நிருபர்களும் நல்ல திறமைசாலிகளாக இருக்க வேண்டியிருக்கிறதென்று மேற்படி கட்டுரையில் எழுதப்பட்டிருக்கிறது. உதவி ஆசிரியர்களும் நிருபர்களும் நல்ல திறமைசாலிகளாகத்தான் இருக்கிறார்கள். ஆனால் அதற்கேற்ப ஊதியம் இல்லாது அவர்கள் வறுமையால் வாட்டப்பட்டு வருகின்றனர்.

எல்லோரையும் பாதிக்கும் அகவிலை ஏற்றம் பத்திரிகையாளரை மட்டும் பாதிக்காதா? அரசியல் வாதிகள் பத்திரிகையாளரைக் கண்டு பயப்படுவதுபோல அகவிலை ஏற்றமும் பயப்படுகிறதா? அதுதான் கிடையாது. பிறர் வாழ்க்கைத் தரம் உயர வேண்டுமென்று ஓயாது எழுதுகிறோம். ஆனால் நம் வாழ்க்கைத் தரம் மட்டும் இன்னும் உயரவில்லை.

மாலை 5 மணிக்குப் பத்திரிகைக் காரியாலயத்திற்குச் சென்று வேலை பார்க்கிறோம். தினசரி 'டெலிபிரிண்ட'ருடன் போராடவேண்டியிருக்கிறது. வரும் செய்திகள் எல்லாம் Mutilated ஆகவோ அல்லது Overtyped ஆகவோ அல்லது Figured ஆகவோ இருக்கும். உடனே அச்செய்திகளைத் தூக்கிக்கொண்டு டெலிபோன் உள்ள இடத்திற்குச் சென்று ராய்ட்டர் காரியாலயத்திற்கு 'போன்' செய்து Correction வாங்கவேண்டும். அதற்குள் மற்றொரு செய்தி Mutilated ஆக வரும். பின்பு அச்சுக் கோக்கப்பட்ட 'புரூப்' வரும். அதிலுள்ள தப்புகளைத் திருத்த வேண்டும். அதற்குள் யாராவது ஒரு உதவி ஆசிரியர் ஏதாவது ஒரு சொல்லுக்குப் பொருள் என்னவென்று கேட்பார். அதைச் சொல்வதற்குள் அச்சுக்கூடத்திலிருந்து 'போர்மேன்' வந்து அச்சுக் கோப்பதற்குச் செய்திகள் இல்லையென்றும் கம்பாஸிட்டர்கள் சும்மா நிற்கிறார்கள் என்றும் கூறுவார்.

இவைகளை யெல்லாம் சரி செய்ய இரவு 11 மணி யாகிவிடும். இந்நிலையில் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. பத்திரிகைத் தொழிலில் ஆர்வமில்லாவிட்டால் இதையெல்லாம் பொறுமையுடன் கவனிக்க முடியுமா? காரியாலயத்தை விட்டு வீட்டிற்கு வந்தால் சகதர்மிணி வீட்டில் அந்தச் சாமான் இல்லை, இந்தச் சாமான் இல்லை என்று அங்கலாய்ப்பாள். காரியாலயத்திலும் நிம்மதி யில்லை; வீட்டிலும் நிம்மதியில்லை!

"உங்களைக் கல்யாணம் செய்துகொண்டு நான் என்னத்தைக் கண்டேன்? ஒரு தேரா, திருவிழாவா, ஒரு சினிமாவா, ஒரு கச்சேரியா பார்த்ததுண்டா!" என்று அவள் சலித்துக் கொள்வாள். இந்த நிலைமையில் நிம்மதி ஏது பத்திரிகையாளருக்கு?

மதுரை
10—5—49 ஜி. கோவிந்தராஜுலு

○●○

## ★ பிறந்தது வாத்தியாங்களா?

சென்னைப் பிரதமரும், நிதி மந்திரியும் சென்னை அரசாங்க ஊழியர்கள் சங்கத்தில் பேசுங்கால், "மத்திய சர்க்கார் ஊழியர்களை விட நீங்கள் எவ்விதத்திலும் குறைந்தவர்களல்ல. அவர்களுக்குச் சமானமான வேலையை நீங்களும் செய்கிறீர்கள்" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். உண்மை. முற்றிலும் உண்மை. ஆனால், மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு இணையாக வேலை செய்யும் நமது மாகாண அரசாங்க ஊழியர்களுக்கு அவர்களுக்குக் கொடுக்கும் சம்பளம் கிடையாது! "தினசரி வாழ்க்கை வரவரக் கடினமாகி வருகிறது. விலைவாசிகள் 'டெம்பரேச்சர்' போல் ஏறி வருகிறது" என்பதை நமது பிரதமர் உணர்ந்திருக்கிறார். ஒப்புக் கொண்டிருக்கிறார். ஆனாலும் அவர்களுக்கு விமோசனம் கிடையாது. "மத்திய சர்க்காரைப் போன்று எங்களுக்கும் வருமானமிருந்தால் அவர்களைப்போல் சம்பளம் கொடுக்கமுடியும்" என்று சொல்கிறார் நமது நிதிமந்திரி.

வேலை செய்வோரின் வேலைத்திறன், அவர்களது அநுபவம், செய்யும் வேலை இவற்றிற்குத் தகுந்த—வேலைக்குத் தகுந்த கூலி—கொடுக்கவேண்டும். மதுவிலக்கிலும் ஸர்வ அபிவிருத்தியிலும் (Firka Development) மாகாண பொக்கிஷம் இன்று வறண்டு விட்டதாம். சரி, நாளைக்கு "ஜமீன்தாரி ஒழிப்பு மசோதா" சட்டமானால் ஜமீன்தார்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும். இதுபோன்று எவ்வளவோ பிரச்னைகள். இப்படியே போனால் அரசாங்க ஊழியர்களின் கதி இலவு காத்த கிளிதானா? அவர்களுக்கு விடிவு காலமே கிடையாதா? மானமாக வாழ விரும்பும் மக்கள் தானே அவர்களும்?

"மத்திய சர்க்கார் சம்பளத்துடன் ஏன் ஒப்பிடுகிறீர்கள்? கொச்சி, திருவிதாங்கூர் சமஸ்தானங்களில் கொடுக்கப்படும் சம்பளங்களுடன் ஒப்பிட்டுப் பாருங்களேன்!"

என்கிறார் நிதிமந்திரி. சுண்டைக்காய் கொச்சி எங்கே? இங்கிலாந்தைவிடப் பெரிய சென்னை ராஜதானி எங்கே? சம்பளம் குறைவானாலும் அதிக வசதிகள் செய்து கொடுத்திருக்கிறார்கள் சமஸ்தானங்களில். நமது சென்னை சர்க்கார் என்ன செய்திருக்கிறது? இன்று கடப்பையில் இருக்கும் ஒரு அப்பாவி உத்யோகஸ்தர் நாளை திருநெல்வேலிக்கு மாற்றப்படுகிறார்! இவருக்கு இப்போது கொடுக்கும் சம்பளம் எப்படிக் கட்டி வரும்?

"வருமானம் உண்டோ இல்லையோ, கம்பெனிகளும், தனி வியாபாரிகளும் ஊழியர்களுக்கு இவ்வளவு அலவன்ஸ் கொடுக்க வேண்டும்" என்று விதித்திருக்கிறார்களே! இவ்விஷயத்தில் 'பிறருக்கு வாத்தியார்' தானே! ஏழை ஊழியர்களுக்கு ஏன் அதிக அலவன்ஸ் கொடுக்கக்கூடாது?

தற்போது இருக்கும் எம். எல். ஏ க்களைவிட இந்த உத்யோகஸ்தர்கள் அதிக வேலை செய்யவில்லையா? மாதத்திற்கு இருமுறை அல்லது மும்முறை சென்னைக்குச் செல்லும் எம். எல். ஏ.க்களுக்கு ரூ. 150 சம்பளம், அதைத் தவிர படி! காலை 7-மணி முதல் இரவு 10-மணி வரை உயிரைக் கொடுத்து வேலை செய்யும் அரசாங்க ஊழியனுக்கு ரூ. 45 சம்பளம்!! இது நியாயமா? அல்லப்பட்டு பரீட்சைகள் தேறி அரசாங்க உத்தியோகத்தில் அமரும் பி.ஏ.க்களுக்குச் சரியான நீதிதானா? பசியின்றி மானமாக வாழத் தேவையான அளவுக்குக் கூடச் சம்பளம் வேண்டாமா?

பாபநாசம்
13—5—49

வெ. சாமிநாதன்

○●○

## என்ன கொடுமை?

இக்கடிதம் பேனா மையினால் எழுதப்படவில்லை; உடலில் கொந்தளிக்கும் ஒவ்வொரு ரத்தத் துளியாலும் எழுதப்படுகிறது. எங்கள் ஜில்லாவை. அதாவது தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த கணபதி என்பவர் யதேச்சாதிகாரம் செலுத்தும் மலேயா சர்க்காரால் சென்ற செவ்வாய்க்கிழமை தூக்கிலிடப்பட்டார் என்ற செய்தியானது எந்த இந்தியனின் உள்ளத்தைத்தான் குமுறச் செய்யாது? ரத்தத்தைத்தான் துடிதுடிக்கச் செய்யாது?

கணபதி செய்த குற்றம்தான் என்ன? யாரையாவது கொன்றாரா? அல்லது யாரையாவது கொல்லத்தான் சதி செய்தாரா? பின்?...கையில் ரிவால்வர் வைத்திருந்ததுதான் அவர் செய்த குற்றம்! காட்டு மிருகங்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள கைத்துப்பாக்கி வைத்திருந்தாராம். இதை விசாரிக்காமல் கணபதியைத் தூக்கிலிட்ட மலேயா சர்க்கார், "மலேயாவில் அவசரச் சட்டத்தின்கீழ் விசாரணையின்றித் தூக்கிலிடுவது சர்வ சாதாரண காரியம்!" என்று ஊளையிடுகிறது.

கணபதி தூக்கிலிடப்பட்டதற்கு முக்கிய பொறுப்பாளி பிரிட்டிஷ் சர்க்கார்தான் என்பதற்கு, கணபதி பிரிட்டிஷ் குடியேற்றப் பகுதியில் கொல்லப்பட்டார் என்பதைத் தவிர வேறு என்ன வேண்டும்?

இப்பொழுது நம் இந்திய சர்க்கார் செய்ய வேண்டியது என்ன வென்றால், மலேயாவிலுள்ள இந்தியர்களைக் காப்பது தம் பொறுப்பு என்று பிரிட்டிஷ் சர்க்கார் உணருகிறதா அல்லது எக்கேடு கெட்டாவது போகட்டும் என்று அவர்களை அந்த யதேச்சாதிகாரம்



நீதிபதி:—நீ திருடியதை நேரில் கண்டதாக ஐந்து சாட்சிகள் சொல்லி விட்டார்கள். உன் சார்பாக யாராவது சாட்சி உண்டா?

குற்றவாளி:—நான் திருடியதைப் பார்க்காத சாட்சிகள் நூறு பேர் வேண்டுமானாலும் கூட்டிக்கிட்டு வரேனுங்க!

செலுத்தும்படியோ அரசாங்கத்தினிடம் ஒப்படைத்து விட்டதா என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்திய சர்க்கார் இப்பொழுதே இது விஷயமாக பிரிட்டிஷ் சர்க்காருடன் கலந்தாலோசித்துக் கணபதி குடும்பத்தினருக்கு ஆவன செய்ய வேண்டும்.

கும்பகோணம்
7—5—49 ஆர். கல்யாணராமன்

○●○

## மொழிப் பற்று

''ஆந்திரர்களின் ஆக்கிரமிப்பு'' என்ற கடிதத்திற்குச் சவால்களாக ''பாஷைப் பிரச்னை'', ''அவமானம் அடைய வேண்டுமா?'' என்ற தலைப்புடன் சென்ற மே மாதம் 15-ம் தேதி ''கல்கி'' இதழில் வெளிவந்த இரு கடிதங்களையும் படித்தேன். விரும்பத்தகாத நிலைமை ஏற்பட்டதற்கு மூலகாரணம் மொழிப் பிரச்னைதான் என்பதை யாரால் மறுக்க இயலும்? மொழிவாரியாக மாகாணங்கள் கேட்பது எதனால்? ஆந்திர மாகாணம் அதி சீக்கிரம் அமைக்கப்பட வேண்டும் என்று ஆந்திரர்கள் ஆத்திரப் படுவது எதற்காக? எல்லாம் மொழிப் பற்று, மாகாணப் பற்றுக் காரணங்களால்தான்!

சென்னை ரேடியோ நிலையத்தில் தமிழுக்குத் தான் முதன்மை ஸ்தானம் அளிக்க வேண்டும். சென்னை தமிழருடையது என்பதை ஆந்திர அறிஞரும், ராஷ்டிரபதியுமான பட்டாபி சீதாராமையாவே ஒப்புக்கொண்டு விட்டார். அவ்வாறிருக்க, ''சென்னை நிலையத்தில் தமிழுக்குத்தான் முதன்மை அளிக்க வேண்டும்; தற்போது தெலுங்கிற்குக் கொடுக்கப்படும் சலுகை வரம்பு மீறியது. ஆகையால் அச்சலுகையைக் குறைக்க வேண்டும்'' என்று கூறுவதன் மூலம் யாரும் அவமானத்திற்கு உள்ளாக மாட்டார்கள்.

மிதமான மொழிப் பற்று எல்லோருக்கும் இன்றியமையாதது. ''தமிழன் என்று சொல்லடா, தலை நிமிர்ந்து நில்லடா!'' என்றார் நம் நாமக்கல் கவிஞர். ஆகவே மொழிப் பற்றைக் கண்டிப்பது அவமானமடையக் கூடிய செய்கை அல்ல. தேசப் பற்றும், மொழிப்பற்றும் ஒன்றிப் பிணைந்தவை; தனிப்பட்டவை அல்ல.

சென்னை
16—5—49 வி. விஸ்வநாதன்

○●○

## கவனிப்பார்களா?

இலங்கைவாழ் இந்தியர்களின் கஷ்டம் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வருகிறது. நாணயக் கட்டுப்பாட்டுச் சட்டம் தலைக்குமேல் வந்துவிட்டது. ஒவ்வொரு மாதமும் அரிசிக் கூப்பனுக்கு ரூ. 25 விதம் அனுப்பலாம் என்று இருந்த சட்டம் இப்போது 1948 நவம்பர் முதல் 1949 மார்ச் மாதம் வரையும் தொடர்ந்து மூன்று மாதம் அனுப்பியவர்கள் மட்டும்தான் அனுப்பலாம் என்று திருத்தப்பட்டிருக்கிறது. அப்படி அனுப்பத் தவறியவர்கள் பர்மிட் எடுத்துத் தான் அனுப்ப வேண்டுமாம். முன்பு சாதாரணமாக இந்தியாவுக்குப் புறப்படும் பிரயாணி ரூ. 140 பிரயாணச் செலவுக்குக் கொண்டு போகலாமென்று இருந்தது. இப்போது அதற்கும் பர்மிட் எடுத்துத்தான் கொண்டுபோக வேண்டுமென்று ஏற்படுத்திவிட்டார்கள். இப்புதிய சட்டத்தால் எத்தனையோ கடைச் சிப்பந்திகளும், ஏழை இந்தியர்களும், இந்தியர் சில்லறை வியாபாரிகளும் ரொம்பவும் பாதிக்கப் படுகின்றனர். ஒரு கடைச் சிப்பந்தி மாதச்சம்பளம் ரூ. 20 அல்லது ரூ. 25 வாங்கக் கூடியவன் தொடர்ந்து மூன்று மாதமும் ஊருக்குப் பணம் அனுப்ப முடியுமா? ஒரு சில்லறை வியாபாரிக்கு ஒரு மாதம் லாபம் கிடைக்கும், ஊருக்கு அனுப்புவான். அடுத்த மாதம் அனுப்ப வசதி யில்லாமல் அதற்கு அடுத்த மாதம் அனுப்பியிருக்கலாம். இடையில் ஒரு மாதம் அனுப்பாமல் நவம்பர் மாதம் முதல் மார்ச் மாதம் வரையிலும் நாலு மாதம் அனுப்பிய கூப்பனுக்கு இந்த மாதம் பணம் அனுப்ப முடியாது என்கிறார்கள். பர்மிட்டுக்கு எழுதினால், பர்மிட்டுக்கு எழுதும் பாரத்தில் கேட்கும் கேள்விகளுக்கு, சில்லறை வியாபாரிகளும், கடைச் சிப்பந்திகளும் பாரத்தில் பூர்த்தி செய்யத்தக்க முறையில் இல்லை. இவைகளை இந்திய சர்க்கார் கவனித்து நல்ல முடிவு செய்வார்களா? அல்லது இலங்கையிலுள்ள எல்லா ஏழை இந்தியர்களும் அகதிகளாக இந்தியாவுக்கு வந்து சேர்ந்த பின்புதான் கவனிப்பார்களா?

சிலோன்
11—5—49 பொ. சந்தோஷ

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ: 'நிம்மதி இல்லை!' என்ற கடிதம் எழுதிய மதுரை ஜி. கோவிந்தராஜுலுவுக்கும், 'ஏதுக்கு வந்தீர்கள்?' என்ற கடிதம் எழுதிய பாபநாசம் வெ. சாமிநாதனுக்கும் ரூ. 12-8-0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

# எழுந்திருங்கள்!






பேவர் - லூபா
உதவியால்




எல்லா ஜாஸ் டைம்பீஸ்களிலும் பறவை டிரேட் மார்க் இருக்கிறது. இவைகள், பேவர் - லூபா கம்பெனியாரால் மட்டுமே இறக்குமதி செய்யப் பட்டு அவர்களது ஷோ-ரூமிலும், அத்தாக்ஷி பெற்ற டீலர்களிடமும் விற்பனையாகின்றன.

உங்கள் ஜாஸ் அலாரம் உங்களை நிச்சயம் எழுப்பிவிடும் என்ற நம்பிக்கையுடன் நிம்மதியாகத் தூங்குங்கள். இப் பிரபல கடிகாரத்தின் இனிமையான ஆறுதல் நீடித்தெழும் ஸ்வரங்களின் இசைக்கு எழுந்துக் கொள்ளுங்கள்.

நெ. 8445. பிளெயின் டயல் ரூ. 24 8
நெ. 8445. ரேடியம் டயல் ரூ. 26/-




பேவர்-லூபா & கோ., லிட., பம்பாய் & கல்கத்தா

# சமுதாய விரோதி

விந்தன்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

*** "திருட்டுச் சாராயத்தைக் காய்ச்சி ஊற்றி இந்த ஏழை ஜனங்களை அணுஅணுவாகக் கொல்வதைக் காட்டிலும் விஷத்தை ஊற்றி ஒரேயடியாய்க் கொன்றுவிடலாம்..." —புஷ்பராஜ்...

## 3

மறுநாள் மாலை. கிராம வீடுகளில் சில அங்கொன்றும் இங்கொன்றுமாக அப்பொழுதுதான் புகைய ஆரம்பித்திருந்தன. அவ்வாறு புகைய ஆரம்பித்திருந்த குடிசைகளுக்கு முன்னால், பசியை மறக்கப் புழுதியில் புரண்டு விளையாடிவிட்டு வந்த குழந்தைகள் குதித்துக் கைகொட்டிக் கும்மாளம் அடித்துக்கொண்டிருந்தன. அன்றிரவு நிச்சயம் சோறு கிடைக்கும் என்ற நம்பிக்கை அந்தக் குழந்தைகளை அப்படியெல்லாம் ஆடச் செய்துகொண்டிருந்தது. 'மாஜி குடியர்'களில் பலர் தேநீர்க் கடையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர்; அவர்களுடைய விழி ராஜவிழியாயிருந்தது. 'திருட்டுச் சாராயம்' குடித்துவிட்டு வருவதற்காகச் சிலர் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றனர்; அவர்களுடைய விழி திருட்டு விழியாயிருந்தது. தலையை வாரி முடிந்துகொள்ளக்கூட நேரமில்லாத — நேரமிருந்தாலும் விருப்பமில்லாத கிராமத்து ஸ்திரீகளில் பலர் நீர்க்குடத்துடன் கிணற்றடியில் நின்று, தங்களுடைய சரித்திரத்தை ஓரளவு உருவகப்படுத்தி உலகத்துக்குக் காட்டிக்கொண்டிருந்தனர். திண்ணைக் கச்சேரிகளிலும் மரத்தடிக் கச்சேரிகளிலும் கலந்துகொண்ட பிற சிரம ஜீவிகளின் கூச்சலோ பெருங் கூச்சலாயிருந்தது. அவர்களுடைய கூச்சல் பொழுது விடிந்ததும் குளக்கரையில் மல்லாந்து படுத்துவிடும் மழை காலத்து மண்டூகங்களின் ஓசை பயத்தோடு கூடிய இரைச்சலை ஒத்திருந்தது. மூன்று மாதத்துக்கொரு முறை, ஆறு மாதத்துக்கொரு முறை காசைக் கண்ணால் பார்க்கும் கிராமத்துச் சுய சிரம ஜீவிகளோ, களைப்பின் மிகுதியால் கஞ்சித் தண்ணீருக்காக அடுப்பண்டை காத்துக்கொண்டிருந்தனர். உலர்ந்த வெற்றிலைச் சருகைப் போட்டுக் குதப்புவதிலேயே இந்த உலகத்தையும்—ஏன், சோற்றையுங்கூட மறந்துவிடும் கிராமத்துக் கிழவர்களும் கிழவிகளும், தங்களுடைய பேரப் பிள்ளைகளை அழைத்துக் கொஞ்சம் வெற்றிலைப் பாக்கு நறுக்கித் தருமாறு வேண்டிக்கொண்டிருந்தனர். மாடும் மனிதனும் ஒன்றாக ஓய்வு பெறும் அந்த வேளையிலே, புஷ்பராஜ் தன்னுடைய ஆற்றங்கரைப் பங்களாவின் அழகிய வராந்தாவில் இப்படியும் அப்படியுமாக 'ராஜ நடை' போட்டுக்கொண்டிருந்தான்.



கிராமத்தின் ஒரு கோடியில் தனியாக இருந்த அந்தப் பங்களாவின் முன்னால் அவனுடைய கவனத்தைக் கவருவதற்கு எத்தனையோ காட்சிகள் இருந்தன. எனினும் முதல் நாள் எழுந்த கேள்வி அவனுடைய உள்ளத்தில் ஏனோ இன்னும் இடம் பெற்றிருந்தது.



"சட்டத்தை மீறிச் சாராயம் காய்ச்சும் 'அந்தக் குடி கெடுக்கும் மனிசன்' யாரா யிருக்கும்?"

புஷ்பராஜின் சிந்தனை மேலும் மேலும் விரிந்துகொண்டே சென்றது. அவ்வாறு விரிந்த சிந்தனைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்கத்தானோ என்னமோ, 'மாஜி குடியன்' ஒருவன் அங்கே வந்து சேர்ந்தான்.

அவனைக் கண்டதும், "யார் அப்பா, நீ?" என்று கேட்டான் புஷ்பராஜ்.

"பேச்சிமுத்துங்க!" என்றான் வந்தவன்.

'பேச்சிமுத்து' என்ற பெயரைக் கேட்டதும் முதல் நாள் தேநீர்க் கடையில் நடந்த சம்பாஷணை புஷ்பராஜின் நினைவுக்கு வந்தது. அவன் ஒரு கணம் திடுக்கிட்டான். மறுகணம் இன்னொரு சந்தேகம் எழவே, "அது சரி; உனக்கு இசக்கிமுத்தைத் தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியுங்க......!"

"கல்லமுத்து......?"

தூக்கிவாரிப் போட்டது பேச்சிமுத்துக்கு—"தெரியுங்க...!" என்று சொல்ல ஆரம்பித்தவன், "தெரியாதுங்க...!" என்று குழறினான்.

அந்தப் பயல்கள் ஒருவேளை 'கபர்தார் ஐயா'வைப் பற்றி இந்தப் பிள்ளையாண்டானிடம் சொல்லிவிட்டார்களோ, என்னமோ என்ற சந்தேகம் அவனுக்கு.

பேச்சிமுத்தின் நிலையை ஒருவாறு உணர்ந்த புஷ்பராஜ் பேச்சை மாற்ற எண்ணி, "சரி, நீ இப்போது எங்கே வந்தாய்?" என்று கேட்டான்.

அதற்குள் தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்ட பேச்சிமுத்து, "என்ன சாமி, ஒன்றும் தெரியாத மாதிரி கேட்கிறீங்களே! இந்த நேரத்திலே, இப்படிப் பதுங்கிப் பதுங்கிப் பார்த்து முழிச்சுக்கிட்டு வேறே எங்கே வருவேனுங்க!" என்றான்.

"எனக்கு ஒன்றும் தெரியாது, அப்பா! நான் இந்த ஊருக்குப் புதுசு. நீயே விஷயத்தைச் சொல்லு!" என்றான் புஷ்பராஜ்.

அவன் 'நான் ஊருக்குப் புதுசு' என்று சொன்னதும் பேச்சிமுத்துக்கு மீண்டும் அந்தப் பாழும் சந்தேகம் வந்து தொலைத்தது. "அப்படின்னு நீங்க யாருங்க?" என்று துணிந்து கேட்டுவிட்டான்.

இந்தச் சமயத்தில் உள்ளேயிருந்து வந்த ஒரு நெடிதுயர்ந்த மனிதர், "என்னடா, பேச்சிமுத்து! அவனை யாருன்னு கேட்கிறே? அவன்தான் என் மகன் புஷ்பராசன்! பட்டணத்திலே படிச்சுக்கிட்டு இருந்தான்; இப்போ லீவிலே ஊருக்கு வந்திருக்கிறான்!" என்றார்.

"அப்படியா, சாமி? இவரு பட்டணத்திலே படிச்சுக்கிட்டு இருந்தவரா? அது தான் இவருக்கு ஒண்ணுமே தெரியலே!" என்றான் பேச்சிமுத்து.

"அது சரி, நான் உன்னைப் புழக்கடைப் பக்கமாத்தானே வரச்சொன்னேன்? நீ ஏன் இந்தப் பக்கமா வந்தே?" என்று கேட்டார் அந்த ஆஜானுபாகு.

"அந்தப் பக்கமாத்தான் வந்தேன், சாமி! அங்கே இந்த கல்லமுத்துப் பயல் இல்லே,



அவன் நின்னுக்கிட்டிருக்தான். அவனுக்கு நம்ம விசயம் தெரிவானென்னு இப்படி வந்திட்டேன்!" என்றான் பேச்சிமுத்து.

"தெரிஞ்சா, என்னடா? அந்தப் பய உன்னே வெல்லத்திலே வச்சா முழுங்கிடுவான்? அந்தமாதிரிச் சோனிப் பயல்களுக்கெல்லாம் நீ ஒண்ணும் பயப்பட வேணும். காலையிலேயிருந்தாச்சும் நீ புழக்கடைப் பக்கமா வா; உன்னைப்போல எத்தனையோ பேர் அந்தப் பக்கமா வரலே?" என்று ஊக்கமூட்டிய வண்ணம் அவனைப் புழக்கடைக்கு அழைத்துச் சென்றார் புஷ்பராஜின் தகப்பனார்.



நோயாளி:—என்ன டாக்டர்! நேற்று நீங்கள் சொன்னீர்கள், மனதில் கவலை இருந்தால் வியாதி சொஸ்தம் ஆகாது என்று. அதற்குள் இன்றைக்கு பில் அனுப்பி விட்டீர்களே!

"அப்படின்னு எனக்குச் சந்தோசந்தான்!— ஆனா இந்த விசயம் அக்கம் பக்கம் தெரியக் கூடாது! — ஆமாம், கபர்தார்!" என்று எச்சரித்தார் தகப்பனார்.

"அக்கம் பக்கத்திலேதான் யாருமே இல்லையே!" என்று சொல்லிக் கையை விரித்துக் கொண்டே அவரைத் தொடர்ந்து சென்றான் புஷ்பராஜ்.

ஐயோ! இது என்ன!

அங்கே பூட்டியிருந்த அறை திறந்திருந்தது. அந்த அறைக்கு மூன்றல் பத்துப் பன்னிரண்டு பேர் கூடியிருந்தனர். அதற்குள் போட்டிருந்த ஒரு நாற்காலியின்மேல் பெரிய ஜாடி ஒன்று நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அதன் அருகே பயங்கர ஆகிருதியுடன் ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவனுடைய கையில் ஓர் 'அளவுக் கிண்ணம்' இருந்தது. அந்த ஆசாமி உள்ளே வந்த வாடிக்கைக்காரர்களுக்கெல்லாம் காட்டுச் சாராயத்தை அளந்து ஊற்றிக் கொண்டிருந்தான்!

இப்பொழுதுதான் புழக்கடையில் பூட்டியிருந்த ஓர் அறை புஷ்பராஜின் ஞாபகத்துக்கு வந்தது. முதல் நாள் இரவு அவன் புழக்கடைப் பக்கமே போகவில்லை; மறுநாள் காலையில்தான் அந்தப் பக்கம் சென்றிருந்தான். அப்போது பூட்டியிருந்த அந்த அறையையும் பார்த்தான். அதற்குள் என்ன இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள அவனுக்குக் காலையில் விருப்பமில்லை. இப்போது தன்னுடைய தகப்பனார் பேச்சிமுத்தைப் புழக்கடைப் பக்கமாக அழைத்துச் செல்லவே, அந்த அறைக்குள் என்ன இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள அவன் விரும்பினான்.

அத்துடன் ஒரு பயங்கரச் சந்தேகமும் அவனுடைய உள்ளத்தில் அப்பொழுது தோன்றிற்று!

தன் மகன் தன்னுடன் வருவதைத் தகப்பனார் விரும்பவில்லை. அவர் அவனைத் தடுத்து நிறுத்தி, "இதெல்லாம் பெரியவங்க காரியம். நீ ஒண்ணும் கண்டுக்கிடாதே! அப்பா, போய் உன் வேலையைப் பாரு! இல்லாட்டா எதாச்சும் ஒரு புத்தகத்தை எடுத்து வச்சுக்கிட்டுப் படி!" என்றார்.

புஷ்பராஜின் சந்தேகம் மேலும் வலுத்தது. "இருக்கட்டும், அப்பா! உங்களுடைய வேலையை நானுந்தான் கொஞ்சம் பார்க்கிறேனே!" என்றான்.

அதாவது, மதுவிலக்குப் பிராந்தியத்தில் அசல் சாராயக்கடை ஒன்று திறந்து வைக்கப்பட்டிருந்தது!

அருவருக்கத் தக்க இந்தக் காட்சியைக் கண்டதும் புஷ்பராஜின் கண்களிலே தீப்பொறி பறந்தது!

"அப்பா! நீங்கள்தானா சட்டத்தை மீறிச் சாராயம் காய்ச்சும் அந்தக் குடிகெடுக்கும் மனிதர்?" என்று அவன் வியப்பின் மிகுதியால் 'ஓ'வென்று இரைந்து கேட்டான்.

அவன் குரல் நடுக்கிற்று!

"ஆமாண்டா, ஆமாம்!" என்று சொல்லிவிட்டு, அவர் ஒரு பயங்கரச் சிரிப்புச் சிரித்தார்.

அவன் தலை சுழன்றது!

"அப்பா! இது சட்ட விரோதம்......" என்று கூக்குரல் ஆரம்பித்தான் அவன்.

"அது எனக்குத் தெரியும்; அப்புறம்?" என்று உறுமினார் அவர்.

"மனித தர்மத்துக்கும் விரோதம், அப்பா!"

"அதுவும் எனக்குத் தெரியும்; அப்புறம்?"

"அப்புறமா! இருட்டுச் சாராயத்தைக் காய்ச்சி விற்று இந்த ஏழை ஜனங்களை அணுஅணுவாகக் கொல்வதைக் காட்டிலும் விஷத்தை விற்று ஒரேயடியாய்க் கொன்று விடலாம்!" என்றான் அவன் ஆத்திரத்துடன்.

"அடேய், என்ன சொன்னே? நேற்றுப் பிறந்த பயல், நீ! நீயா எனக்கு வந்து புத்தி சொல்றே? 'இதெல்லாம் பெரியவங்க காரியம்; நீ ஒண்ணும் கண்டுக்கிடாதே!' என்று நான் உனக்கு முன்னாலேயே சொன்னேனா, இல்லையா?—வீணா என்னுடைய கோவத்துக்கு ஆளாவாதே, போ!"

"இந்த அக்கிரமத்தை நீங்கள் நிறுத்தாத வரை என் உயிரே போவதாயிருந்தாலும் நான் இந்த இடத்தை விட்டுப் போகவே மாட்டேன்!"

"அடடே!—ஓ! போடா, நாயே! இந்தக் 'கபர்தார் கனகலிங்க'த்துக்கிட்டவா வந்து நீ 'கணக்கு'ப் பண்றே? இந்த இடத்தைவிட்டு நீயே மரியாதையாய்ப் போறியா?—இல்லே, நானே கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளட்டுமா?" என்று அவர் சிம்மநாதம் செய்தார்.

அவ்வளவுதான்; மகன் ஆட்டுக்குட்டியாக அடங்கி, நின்ற இடத்திலேயே நின்றான்.

கபர்தார் கனகலிங்கம் கண்கள் 'ஜிவ்'வென்று சிவக்க, மீசை முறுக்கு கலைந்து துடிக்க, அவனை நெற்றிக் கண் திறந்த சிவபெருமான் திரிபுரத்தைப் பார்த்தது போல் பார்த்தார்.

அப்பொழுதும் அவன் எரியவும் இல்லை; அசைந்து கொடுக்கவும் இல்லை!

அடுத்த நிமிஷம் 'பளீர், பளீர்' என்று இரண்டு அறைகள் அவனுடைய கன்னத்தில் மின்னிவிட்டன.

புஷ்பராஜ் அசந்து போனான்!

அதற்குப் பிறகு அவன் அங்கே நிற்கவில்லை. கன்னத்தைத் தடவி விட்டுக் கொண்டே தன் அறைக்கு வந்து சேர்ந்தான்.

இருட்டுச் சாராய வியாபாரம் எந்தவிதமான இடைஞ்சலுமின்றி வழக்கம்போல் ஏழு மணி வரை தொடர்ந்து நடந்தது.

## 4

ஏழு மணிக்குப் பிறகு புழக்கடை அறையைப் பூட்டிக்கொண்டு வந்த கபர்தார் கனகலிங்கம் நேரே புஷ்பராஜின் அறைக்குள் ஆவேசத்துடன் நுழைந்தார்.

அவருடைய ஆவேசத்தைக் கண்டதும் புஷ்பராஜ் தன்னை யறியாமலே எழுந்து நின்றான்.

"அடேய், எனக்கு முன்னமேயே தெரியும்—நீ இப்படி எதாச்சும் 'தத்துப் பித்து'ன்னு உளறுவேன்னு!—பேசாம நான் சொல்றதைக் கேளு; உனக்கும் எனக்கும் இனிமே சரிப்பட்டு வராது. பட்டணத்துப் படிப்பு படிச்சு உன் புத்தி கோணலாப் போயிடுச்சு! 'காத்துள்ள போதே தூத்திக் கொள்ளணும்' என்கிறதுபோல, கள்ளுக் கடையை எடுத்திருக்கிற இந்த நாளிலேதான் நான் நாலு காசு சம்பாதிக்கணும்னு இருக்கேன். அதுக்கு இடைஞ்சலா நீ இருந்தியோ எனக்கு ரொம்பக் கோவம் வரும், ஆமாம், கபர்தார்! — அந்தக் கோவத்திலே நான் உன்னை என்ன வேணுமானாலும் செய்துப் பிடுவேன்!—அதனாலே நீ இன்று ராத்திரியே திரும்பிப் பட்டணத்துக்குப் போயிடறது தான் நல்லது. இந்தா, ஒரு அம்பது ரூவா; வச்சுக்கோ! அப்புறம் மாசா மாசம் உன் செலவுக்கு நான் வழக்கம் போலப் பணம் அனுப்பறேன் — என்ன?" என்று நயத்துடன் பயமும் காட்டிச் சொன்னார் கனகலிங்கம்.

"இருக்கிற காசு போதுமே, அப்பா!" என்று மீண்டும் ஏதோ சபலத்துடன் ஆரம்பித்தான் புஷ்பராஜ்.

"இந்த உபதேசம் தானே நான் வேணாங்கிறேன்!" என்று கர்ஜித்தார் கனகலிங்கம்.

புஷ்பராஜுக்கு அதற்கு மேல் என்ன



"இந்த ஊரிலே அத்தனை பேரும் நாலணாக் காசுக்குக்கூட வழியில்லாத தரித்திரப் பயல்கள்தான்!"

"அது உனக்கு எப்படித் தெரியும்?"

"நான் ஒவ்வொருவரிடத்திலும் நாலணா கேட்டுப் பார்த்துவிட்டேன்!"

சொல்வதென்று தெரியவில்லை. அவன் வாயடைத்துப் போனான். கபர்தார் கனகலிங்கம் அவனுடைய கையில் ஐம்பது ரூபாயைப் பலவந்தமாகத் திணித்தார்.

புஷ்பராஜ் அந்தப் பணத்தையும் அப்பாவின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தான். அதற்குப் பிறகு எதிர்ச் சுவரில் மாட்டியிருந்த தன் தாயாரின் போட்டோவைப் பார்த்தான். ஒரு நீண்ட பெருமூச்சுக்குப் பிறகு, "அம்மா இன்று உயிருடன் இருந்திருந்தால்......?" என்று எண்ணி அவன் மனம் ஒரு கணம் ஏங்கிற்று. மறு கணம் 'அம்மா இன்று இல்லாமற் போனதே மேல்' என்று எண்ணி அவன் மனம் ஆறுதலடைந்தது.

சித்தன்னையோ அந்தப் பக்கம் தலை காட்டவே யில்லை; கபர்தார் கனகலிங்கத்தைக் கண்டால் அவளுக்கு அவ்வளவு தைரியம்!

புஷ்பராஜ் நின்றது நின்றபடி நின்று என்ன செய்வதென்று யோசித்தான். கபர்தார் கனகலிங்கம் பொறுமை யிழந்து, "என்ன சொல்கிறாய்?" என்று அதட்டினார்.

"அப்படியே ஆகட்டும், அப்பா!" என்று சொல்லிவிட்டான் புஷ்பராஜ்.

அந்த நிமிஷம் அப்பாவின் யோசனை அவனுக்கு ஒரு விதத்தில் நல்லதாகவே தோன்றிற்று. ஆனால் அடுத்த நிமிஷம்...?



"ஸார்! இந்த ஹோட்டலில் தங்கவேணும்! இங்கே சாப்பாடு-டிபன் டயம் எப்படி?"

"காத்தாலே 6 மணிலேருந்து 11 மணி வரையிலும் டிபன், 11 மணிலேருந்து மத்தியானம் 2 மணி வரையிலும் சாப்பாடு, மத்தியானம் 2 மணிலேருந்து சாயந்திரம் 7 மணி வரையிலும் டிபன், சாயந்திரம் 7 மணிலேருந்து ராத்திரி 10 மணி வரையிலும் சாப்பாடு......!"

"இந்தமாதிரி நான் பூராவும் டிபனும் சாப்பாடும் சாப்பிட்டுக்கிட்டிருந்தால் நான் எப்பத்தான் டவுனைச் சுத்திப் பார்க்கிறது?"

அவனுடைய மனதிலே ஒரு பெரிய போராட்டம் எழுந்தது. அந்தப் போராட்டத்தின் காரணமாக அவனுடைய யோசனை வேறு திக்கை நோக்கிச் சென்றது. அந்தத் திக்கிலே ஒரு வாயில்லாத பசுவின் கன்றுக்காகத் தன் ஒரே மகனைத் தேர்க்காலில் பலி கொடுத்து நீதி வழங்கிய மனுநீதிச் சோழனை அவன் அகக்கண்ணால் கண்டான்!

அவ்வளவுதான்; அவன் உள்ளத்தில் குமுறிக்கொண்டிருந்த எரிமலை வெடித்தது!

அதன் பலன்......?

• • •

அன்றிரவே வீட்டை விட்டுச் சென்ற புஷ்பராஜ், மறுநாள் காலை கபர்தார் கனகலிங்கம் கொஞ்சமும் எதிர்பாராத விதமாகப் போலீஸ் அதிகாரிகளுடன் வீட்டுக்குள் நுழைந்தான். புழக்கடையில் பூட்டி வைக்கப்பட்டிருந்த அறை கபர்தார் கனகலிங்கத்தின் உத்தரவில்லாமலே திறக்கப்பட்டது. உள்ளேயிருந்த சாராய ஜாடிகளெல்லாம் போலீஸாரால் கைப்பற்றப்பட்டன.

கபர்தார் கனகலிங்கம் கைதியானார்!

அதுவரை தன் மார்பை அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்த புஷ்பராஜ், அப்பாவை அந்தக் கோலத்தில் பார்க்கச் சகிக்காமல் கண்களைக் கைகளால் மறைத்துக்கொண்டு விம்மி விம்மி யழுதான்!

என்ன விசித்திரமான மனித இதயம்!

அடுத்த சில நாட்களில் கபர்தார் கனகலிங்கத்தின் வாக்கு மூலத்தைக் கொண்டு மற்றும் பலரைப் போலீஸார் கைது செய்தனர். அவர்களெல்லாம் கபர்தார் கனகலிங்கத்துக்குத் துணையாக இருந்து, அவ்வப்பொழுது திருட்டுச் சாராயம் காய்ச்சிக் கிராமமெங்கும் விநியோகித்துக் கொண்டிருந்தவர்கள் என்ற விஷயம் பின்னால் தெரிந்தது.

காட்டுத் தீ போல் பரவிய இந்தச் செய்தி தாழம்பேடு முழுவதையுமே ஒரு கலக்கு கலக்கி விட்டது. அதன் காரணமாகப் புஷ்பராஜைச் சிலர் வைதார்கள்; சிலர் வாழ்த்தினார்கள்.

கல்லுமுத்தோ அவனை 'தெய்வம்' என்றே சொல்லிவிட்டான்!

எதையும் புஷ்பராஜ் பொருட்படுத்தவில்லை. ஆனால் அவனுடைய இதயத்தின் அடிவாரத்தில் மட்டும் இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு வேதனை குடி

கொண்டிருந்தது. அந்த வேதனை அவனுடைய முகத்திலும் பிரதிபலிக்கத்தான் செய்தது.

இந்நிலையில் சிற்றன்னைக்கு என்ன சமாதானம் சொல்வதென்றே அவனுக்குத் தெரியவில்லை. அவளோ அவனை ஏறெடுத்துக் கூடப் பார்க்காமல் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக ஒரு மூலையில் உட்கார்ந்து 'துக்கம்' கொண்டாடிக்கொண்டிருந்தாள்!



புஷ்பராஜ் அவளை மெல்ல நெருங்கி, "சித்தி, என்னை மன்னித்து விடுங்கள், சித்தி!" என்று தழதழத்த குரலில் வேண்டினான்.

அதே சமயத்தில் பத்திரிகைகளின் மூலம் விஷயத்தை அறிந்த கபர்தார் கனகலிங்கத்தின் இளைய மாமனார் தாழம்பேடை நோக்கிப் பறந்து வந்து சேர்ந்தார்.

சோகமே உருவாய் உட்கார்ந்திருந்த மகளைக் கண்டதும் அவருக்குப் பகீரென்றது. "என், தம்பி! இப்படிக் கூடச் செய்யலாமா?" என்று அவர் புஷ்பராஜை நோக்கிக் கேட்டார்.

அவரிடம் பணம் இல்லாததால்தானோ, என்னவோ — அவருடைய குரலில் ஆத்திரம் இல்லை; அனுதாபம் இருந்தது.

புஷ்பராஜ் பதில் ஒன்றும் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டான். அவனுடைய கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் கீழே விழுந்து சிதறின.

பெரியவர் "அவர் உன்னைப் பெற்று வளர்த்தவர் இல்லையா?" என்று கேட்டார்.

புஷ்பராஜ் குனிந்த தலை நிமிராமல், "ஆமாம் ..." என்றான்.

"புஷ்பராஜ் என்று அழகாகப் பெயரிட்டு அன்புடன் உன்னை அழைத்தவர் இல்லையா?"

"ஆமாம்...."

"நீ படித்து முன்னுக்கு வரவேண்டும் என்பதற்காகப் பணத்தைத் தண்ணீராகப் பாவித்துச் செலவழித்தவரில்லையா?"

"ஆமாம்...."

எல்லாவற்றுக்கும் அவன் 'ஆமாம்' என்று சொல்லவே, பெரியவர் இன்னும் கொஞ்சம் அவனை நெருங்கி, "அப்படிப் பட்டவரா உனக்கு விரோதி?" என்று கேட்டார்.

"அவர் எனக்கு விரோதி இல்லை......!"

"பின் யாருக்கு விரோதி?"

"சமுதாயத்துக்கு விரோதி!"

"சொந்த அப்பாவை விடவா சமுதாயம் பெரிது?"

"ஆமாம், அது அப்பாவை விடப் பெரிது; அரசனைவிடப் பெரிது; அரசாங்கத்தைவிடப் பெரிது!" என்றான் புஷ்பராஜ்.

பெரியவர் வீட்டின் முகட்டைப் பார்த்த வண்ணம் ஒரு விநாடி யோசித்தார். பிறகு, "ஆமாம், பிள்ளையாண்டான் சொல்வதும் ஒருவிதத்தில் சரிதான்; ஆனால் மனசுதான் கேட்கமாட்டேன் என்கிறது!" என்றார்.

இந்தச் சமயத்தில் புஷ்பராஜின் சிற்றன்னை எழுந்து நின்று, "பிள்ளையாண்டான் சொல்வது சரிதான், அப்பா! ஆனால் அந்த மனுஷன் வெளியே வந்த பிறகு இந்தப் பிள்ளையை உயிரோடு வைத்திருக்க வேண்டுமே!" என்று கண்ணீரும் கம்பலையுமாகத் தன் கவலையைத் தெரிவித்தாள்.

இதைக் கேட்டதும் புஷ்பராஜ் திகைத்துப் போனான்!

அடுத்த நிமிஷம் அவனுடைய இதய பாரம் குறைந்தது; முகமும் மலர்ந்தது. "சித்தி, எனக்காக நீங்கள் வருந்த வேண்டாம். இதோ, நான் ஏற்கெனவே தீர்மானித்திருந்தபடி இன்றே இந்த வீட்டை விட்டுப் போகிறேன். எனக்கு அப்பாவின் பணமும் வேண்டாம்; பாத்தியதையும் வேண்டாம். வஞ்சகமின்றி உழைத்து வயிறு வளர்க்கும் கோடானு கோடி மக்களில் ஒருவனாக நானும் வாழ்கிறேன். அவர் சிறையிலிருந்து விடுதலையாகி வரும் வரை தாத்தா உங்களுக்குத் துணையாக இருக்கட்டும்!" என்று சொல்லிவிட்டு, அவன் 'விர்' ரென்று வெளியே கிளம்பி விட்டான்.

அதற்குப் பிறகு புஷ்பராஜ் அந்தப் பக்கம் திரும்பவே யில்லை. இவ்வளவு பெரிய உலகத்தில் அவன் நாணயத்துடன் வாழ இடமா கிடைக்காமற் போயிருக்கும்?

# முரட்டு மாமா

பி.எஸ்.மணி

"அம்மா! எனக்குச் சீக்கிரம் சாதம் போடம்மா! மாமா எனக்கு நல்ல கதை ஒன்று சொல்றேன் என்று சொல்லியிருக்கார்!" என்று கூறித் தனது தாயாரை நச்சரித்துச் சாப்பிட்டு விட்டு, மாமாவின் அருகில் வந்து உட்கார்ந்தான் விச்சு.

அவனுடைய மாமா சிறிது நேரம் யோசித்துவிட்டுக் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்:

* * *

ஒரு கிராமத்தில் ராஜூ என்ற பையன் ஒருவன் இருந்தான். அவனுக்கு முரட்டுக் குணம் அதிகம். அவன் ஒவ்வொரு வகுப்பிலும் இரண்டு வருஷத்துக்குக் குறையாமல் இருந்து வந்தான். அவனை எவ்வளவோ கண்டித்தும் அதட்டியும் அவனுடைய முரட்டுச் சுபாவம் தணியவேயில்லை.

ஆனால் பெரியவர்களைக் கண்டால் மட்டும் அவன் சிறிது பயப்படுவான். தன்னைவிடச் சிறியவர்களிடந்தான் அவன் தனது முரட்டுச் சுபாவத்தையும் விஷமத்தையும் காட்டுவான்!

சின்னஞ் சிறுவர்கள் மாலையில் பள்ளிக்கூடம் விட்டதும் ஆடிக் கொண்டும் பாடிக்கொண்டும் சந்தோஷமாக வீட்டை நோக்கி வந்து கொண்டிருப்பார்களல்லவா? திடீரென்று அவர்கள் முன்னால் தோன்றுவான் ராஜூ. அவ்வளவுதான்; அவனைக் கண்டதும் சிறுவர்கள் ஓட்டம் பிடிக்க ஆரம்பித்து விடுவார்கள்.



ராஜூ ஓடிப் போய் அவர்களில் இருவர்களைப் பிடித்துக்கொள்ளுவான். அவர்களுடைய புத்தகப் பைகளைப் பிடுங்கி அவற்றிலிருந்து புத்தகங்களை எடுத்து ஆகாயத்தில் பறக்கவிடுவான். அவ்வாறு பறக்க விடுவதில் அவனுக்கு ஒரே ஆனந்தம்! ஆனால் சிறுவர்களோ 'ஹோ' வென்று அழ ஆரம்பித்து விடுவார்கள்! பிறகு ராஜூ ஆளுக்கு இரண்டு அடி கொடுத்து அனுப்புவான்!

சிறுவர்களுக்குத் தங்கள் வீட்டில் போய் அவனைப் பற்றிப் புகார் சொல்வதற்குப் பயம்; அது அவனுக்குத் தெரிந்துவிட்டால் இன்னும் அதிகமாகத் துன்புறுத்துவான் என்று ஒன்றும் சொல்லமாட்டார்கள்.

* * *

ஒரு நாள் பள்ளிக்கூடம் விட்டதும் ராஜூ ஓர் இடத்தில் வந்து ஒளிந்து கொண்டான். சிறுவர்கள் ராஜூவின் கையில் அகப்படாமல் வீடு போய்ச் சேர வேண்டுமே என்று பயத்துடன் வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு முன்னால் ராஜூவின் வகுப்பு உபாத்தியாயர் வந்து கொண்டிருந்தார். பாவம், அது ராஜூவுக்குத் தெரியவேயில்லை!

ராஜூ ஒரு மரத்தடியில் ஒளிந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் வாத்தியாருக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் எதற்காக அங்கு ஒளிந்து கொண்டிருக்கிறான் என்று அறிய அவருக்கு ஆவல் மிகுந்தது. ஆகவே அவர் கொஞ்ச தூரத்தில் போய் நின்று கொண்டார்.

வழக்கம்போல் அன்றும் ராஜூ யம கிங்கரனைப் போல் சிறுவர்களின் முன்னால் வந்து குதித்து அவர்களுடைய




ஸெலூன்காரர் (தமாஷாக):— **என்ன தம்பி, கிராப்பா, முகக்ஷவரமா?**

**பையன்:—கிராப் வெட்டிக் கொள்ள வேண்டும் என்றுதான் வந்தேன். உள்ளே வந்து உம்மைப் பார்த்ததும் தலையை மொட்டை அடித்துக் கொள்ளுவதென்று தீர்மானித்து விட்டேன்!**

---

பைகளைப் பிடுங்கிப் புத்தகங்களைக் காற்றில் பறக்க விட்டுக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த அவன் உபாத்தியாயருக்குக் கோபம் தாங்க முடியவில்லை. மெதுவாக ராஜுவின் பின்னால் வந்து அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். ராஜுவின் கை கால்களெல்லாம் பயத்தால் நடுங்க ஆரம்பித்து விட்டன.

வாத்தியார் அவன் செய்த காரியங்களையே திருப்பிச் செய்தார். அதாவது, ராஜுவின் புத்தகங்களைப் பிடுங்கிக் காற்றில் பறக்க விட்டார்! கூடியிருந்த சிறுவர்கள் அனைவரும் கை தட்டி ஆரவாரித்தனர். ராஜு வெட்கத்தால் முகத்தைக் கீழே தொங்க விட்டுக் கொண்டான். வாத்தியார் அவன் முதுகில் பலமாக இரண்டு அறை கொடுத்து, "இனிமேல் நீ இவர்களைத் துன்புறுத்தியதாக அறிந்தால், உன் முதுகுத்தோலை உரித்து விடுவேன்!" என்று சொல்லி அனுப்பினார்.

ராஜு வீட்டை நோக்கி ஓடினான். வழியில் கிடந்த கல் ஒன்று தடுக்கவே, அவன் பொத்தென்று கீழே விழுந்தான். அவ்வளவுதான்; அவனுடைய தூக்கம் கலைந்து விட்டது!

ஆமாம், அதுவரை அவன் கண்டதெல்லாம் உண்மையல்ல; கனவுதான்!

ராஜு கட்டிலிலிருந்து கீழே விழுந்த சத்தம் கேட்டதும் அவனது தாயார் ஓடோடியும் வந்து, "என்னடா! ஏன் கீழே விழுந்தே?" என்று கேட்டாள். ராஜு தான் கண்ட கனவை யெல்லாம் அம்மாவிடம் சொன்னான்.

"பார்த்தாயா, நீ சிறு குழந்தைகளைத் துன்புறுத்துவதினால்தான் உன்னைக் கடவுள் கனவில் பயமுறுத்தியிருக்கிறார். 'எளியாரை வலியார் வாட்டினால் வலியாரைத் தெய்வம் வாட்டும்' என்பதை இப்பொழுதாவது தெரிந்து கொண்டாயா? இனிமேல் சிறு குழந்தைகளை வாட்டி வதைக்காதே!" என்று தாயார் உபதேசித்தான். ராஜுவும் 'உம்'மென்று தலையை ஆட்டினான்.

அதற்குப் பிறகு அவன் சிறுவர்களைத் துன்புறுத்தும் வழக்கத்தை விட்டுவிட்டான்.

• • •

**மா**மா கதையைச் சொல்லி முடித்ததும், "என்ன மாமா! ராஜாக் கதை சொல்கிறேன் என்று சொல்லிவிட்டு, வேறு ஏதோ கதையல்லவா சொல்லியிருக்கிறாய்?" என்றான் விச்சு.

"நான்தான் எனக்குத் தெரிந்த ராஜாக் கதைகளையெல்லாம் உனக்குச் சொல்லி விட்டேனே! இன்று சொல்ல வேறு எந்த ராஜாக் கதையும் எனக்குத் தெரியவில்லை. அதனால்தான் என் சின்னஞ்சிறு வயதில் நடந்த இந்தக் கதையைச் சொன்னேன்!" என்றார் மாமா.

"அப்போ, அந்த முரட்டு ராஜு நீங்களா மாமா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் விச்சு.

"ஆமாம்" என்று மாமா தலையசைத்தார்.

"முரட்டு மாமா, நம்ம ராஜு மாமா!" என்று கூவிக் கொண்டே தூங்குவதற்குச் சென்றான் விச்சு.

# தனிமையாக்கப்பட்ட கல்லூரி மாணவி





## இப்போது பிரபல பரிசைப் பெற்றவள் 'க்ரூஷனு'க்கு வந்தனம்.

ஒரு வருட காலத்துக்குள் சீதா தன் களையான வதனத்தையும் செந்நிறங்களையும் இழந்தாள். அவள் களைப்பும் கவனமின்மையும் பெற்று அவளது மேனி கருக்கிட்டு விட்டது. எல்லோரும் அவளை மந்தம் என்றும் முன் கோபி என்றும் கூறினர். தன் தாயாரிடம் தன் கல்லூரியை விட்டுவிடப் போவதாகக் கூறியபோது அவளது தாய் "தினம் காலை உண்டிக்கு முன் "க்ரூஷன்" சாப்பிடு" என்று புத்தி கூறினாள்.

ஒரு வருடத்துக்குப் பின் சீதா ஓர் பரிசு பெற்ற மாணவி. இண்டர்மீடியேட் பரீக்ஷையில், "அழகும் புத்தியும் அடைவது அதிர்ஷ்டமே" என்று அவள் நண்பர்கள் கூறினர். புன்முறுவலித்து தனது தாயின் யோசனையைக் கூறினாள்.

மனித வர்க்கத்தைத் தாக்கும் பாதி நோய்கள் ஓர் மூலகாரணத்தைக் கொண்டதாகும். அதுதான் உள்ளச் சோர்வு. உங்கள் உடம்பின் உட்புறத்தை ஒழுங்காக வைத்துக்கொள்ள ஓர் நிச்சயமான ஜாக்ரதையான முறை சிறிதளவு தினமும் 'க்ரூஷன் ஸால்ட்' எடுத்துக் கொள்வதுதான். 'க்ரூஷன்' ஆறுவகை இயற்கை உப்புகளின் சேர்க்கையாதலால் உங்கள் வெளிப்போக்கு அவயவங்களை சரியான முறையில் பாதுகாத்து, குடலை மந்தப்படுத்தி, ரத்தத்தை விஷமாக்கும் மலத்தை அப்புறப் படுத்துகிறது. 'க்ரூஷன்' உங்களை அதிக வனப்புடனும், அதிக களையுடனும் விளங்கச் செய்கிறது.

இன்றே 'க்ரூஷன்' வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும் விலை ரூ. 1-10 (மஞ்சள் பெட்டியில்)




## நீங்கள்கூட அந்த 'க்ரூஷன்' உணர்ச்சியை அடையலாம்

# விகாரமான வேக்காடு மறைகிறது

## கிட்டத்தட்ட புத்திக் கோளாறுதான்!

"சில மாதங்களுக்கு முன் சரும வேக்காட்டினால் மிகவும் அவஸ்தைப் பட்டேன். அதுவும் இரவு நேரத்தில் படுத்திருக்கும்போது பைத்தியம் பிடித்ததுபோலவே இருந்தது. உங்களது விசித்திர தயாரிப்பாகிய வெல்டர்மாவுக்குப் பெரிதும் நன்றி செலுத்த வேண்டுமென்று நான் மனப்பூர்வமாகக் கூறுவேன். வெல்டர்மாவை சில தடவைகள் உபயோகித்த பிறகுதான் வெந்த சருமம் பூரணமாக சொஸ்த மடைந்தது. அநேக இதர மருந்துகளை உபயோகித்தேன். ஆனால் வெல்டர்மாவுக்கு இணை வேறெதுவும் இடையாது என்பதே என் உறுதி. எனக்குப் பிடித்த மருந்து அதுதான்."



— மிஸஸ் D. F. ஏஞ்சல்

### இருவித கிருமி நாசன வேலை

சருமத்தின்மேல் முதல் தடவையாகப் பட்டவுடனேயே வெல்டர்மாவின் இருவித கிருமி நாசன சக்திகளும் வேலை செய்யத் தொடங்குகின்றன. அநேக சரும ரோகங்களுக்கு ஆஸ்பதமான பல்வேறு ரக கிருமிகளை இருமடங்கு வேகத்தில் கொன்று நாசமாக்குகின்றன. அதிலுள்ள கிருமி நாசன சக்திகள் இரண்டும் பல்வேறுவித விஷக் கிருமிகளுக்கு இரண்டு சத்துருக்களாகும்.

### சருமத்தினூடே செய்யும் வேலை

எரிச்சல் அடங்குகிறது. நமைச்சலும் வேக்காடும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றன. சருமம் சுத்தமாகவும் சுகமாகவும் ஆகிவிடுகிறது. எக்ஸிமா, கொப்புளங்கள், வேக்காடுகள், பருக்கள், மற்றும் சருமத்திற்கு அடியில் ஏற்படும் இதர ரோகங்களெல்லாம் சொஸ்தமாகின்றன. ஏனெனில், வெல்டர்மா சருமத்தினூடே சென்று ரோகத்திற்கு மூலாதாரமான இடத்திலேயே தாக்குகிறது.

நீரில் - எண்ணெய் - சேர்க்கையெனும் அடிப்படையில் தயாரிக்கப் பட்டிருப்பதால் நோய்ப்பட்ட இடத்திலுள்ள விஷத்தை வடிகட்டி வெளியேற்றுகிறது வெல்டர்மா. ஆகையால் மீண்டும் நோய் தொற்றி விடாமல் பாதுகாப்பளிக்கிறது. வழுவழுப்பான வெல்டர்மா பிசுக்கற்றது. கறை படாது, உபயோகித்த இடம் புலனாகாது. ஆகையால் எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் உபயோகிக்கலாம். எல்லா சிறந்த கெமிஸ்டுகளிடமும், டீலர்களிடமும் கிடைக்கும்.

ஜியாப்ரே மானர்ஸ் அன் கோ., லிமிடெட்

பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC

**Valderma**

THE Non-Greasy BALM

# தீருங்காலிகள்

**கி. ரா. கோபாலன்**

கன்னிகா மில்லில் ஸ்ட்ரைக்; அதாவது தொழிலாளர்களின் வேலை நிறுத்தம். தலைவர்கள் தூண்டுதலினால் இரண்டு மூன்று தரம் வேலை நிறுத்தம் செய்து வெற்றியும் கண்ட தொழிலாளர்கள் தங்களுடைய வெற்றிக்குக் காரணமா யிருப்பது வேலை நிறுத்தம்தான் என்ற முடிவுக்கு வந்தனர். அந்த முடிவுதான் மேற்படி வேலை நிறுத்தத்துக்குக் காரணம்.

வேலை நிறுத்தம் ஒரு மாதம் தொடர்ந்து நடந்தது. மில் முதலாளிகள் வேறு தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தி வேலை தொடங்க முயற்சி செய்தனர். எதிர்பாரா வண்ணம் ஓடுகிற பஸ்ஸிலும் டிராமிலும் கற்களும் கண்ணாடித் துண்டுகளும் சரமாரியாக வந்து விழவே, கன்னிகா மில்லில் ஏற்பட்ட தொழிலாளர் வேலை நிறுத்தத்தின் வேகத்தைப் பொதுஜனங்களும் ஒருவாறு உணர்ந்து, தொழிலாளர்களிடம் ஒருவகையான அனுதாபம் கலந்த வெறுப்புக் கொள்ளலாயினர். போலீஸார் ஊரில் அமைதியை ஏற்படுத்திப் பொதுஜனங்களைக் கல்லடியிலிருந்து காப்பாற்றப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தனர். அரசாங்கத்தார் தொழிலாளர்களுக்கும் மில் முதலாளிகளுக்கும் சமரசம் செய்து வைக்க முயற்சி செய்தனர்.

கன்னிகா மில்லில் ஏற்பட்ட வேலை நிறுத்தம் பற்றிக் கந்தசாமியும் கேள்விப்பட்டான். கந்தசாமி வேலையில்லாமல் தவிக்கும் ஒரு தொழிலாளி. அவனுக்குத் தெரியாத தொழிலே இல்லையென்று சொல்லிவிடலாம். ஏனென்றால் அவன் எத்தனையோ எவ்வளவோ மில்களிலும் கம்பெனிகளிலும் வேலைக்கு இருந்திருக்கிறான். பாவம், அவனுடைய ஜாதக விசேஷம் அவன் எந்த இடத்திற்கு வேலைக்குப் போகிறானோ, அந்தக் கம்பெனியோ மில்லோ இரண்டு மூன்று மாதத்திற்குள் திவாலாகி விடுவது சகஜமாயிருந்தது. இரண்டு மாத காலமாக அவனுக்கு வேலை கிடையாது. வேலையைத் தேடி அவன் போகாத இடமும் இல்லை; முயற்சி செய்யாத வகையும் இல்லை. இரண்டுமாத காலமாக வீட்டில் சரியான படி உலை பொங்கவில்லை. ஆரம்பத்தில் கால் பட்டினி அரைப் பட்டினியாக இருந்து ஐந்தாறு நாட்களாய் முழுப் பட்டினியின் நிலைக்கு வந்திருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் கன்னிகா மில்லில் வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அவன் மெதுவாக உளவு விசாரித்ததில் கன்னிகா மில்லில் தினக் கூலிகளை வேலைக்கு எடுப்பதாயும், தகுந்த ஆசாமிகளா யிருந்தால் நிரந்தரமாக வைத்துக் கொள்வதாயும் கேள்விப்பட்டான். இதைக் கேள்விப்பட்டதும் அவன் மனதில் ஓர் எண்ணம் எழுந்தது.

காமாட்சி அப்பொழுதுதான் அடுத்த வீட்டிலிருந்து வாங்கி வந்த அரைப்படி அரிசி நொய்யிலுள்ள கற்களைப் பொறுக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். சரியான சாப்பாடு இல்லாத காரணத்தால் வாடி வதங்கி யிருந்த அவளுடைய முகம் அந்த அரைப்படி நொய்யரிசியைக் கண்டதும் சிறிது மலர்ந்திருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தன் மனைவியிடம் தெரிவிக்கக் கந்தசாமிக்கும் ஒரு தைரியம் ஏற்பட்டது. “கன்னிகா மில்லிலே ஸ்ட்ரைக்காம்; உனக்குத் தெரியுமா?” என்று ஆரம்பித்தான்.

அவள் தலை நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். சட்டென அவள் முகம் வாடிச் சுருங்கியது. “தெரியும்; வேலை யிருந்து சம்பாதிக்கிறவங்க அது போதாதுன்னு முதலாளியோடே போராடுறாங்க; வேலையே இல்லாம தினம் பட்டினியா கிடக்கிறவங்க எந்தத் தெய்வத்தோட போராடறது!” என்றாள் அவள் அடக்கமாட்டாத துக்கத்தோடு.

“எனக்கொரு யோசனை தோணுது....” என்று இழுத்தான் கந்தசாமி.

“உங்களுக்கு ஏதாவது யோசனை தோணிக்கிட்டேதா னிருக்குது. ஆனா ஒரு யோசனையும் வயித்துப் பசியைப் போக்கல்லே!” என்றாள் காமாட்சி.

கந்தசாமி “கன்னிகா மில்லிலே தினக் கூலிக்கு ஆள் எடுக்கிறாங்களாம்; மனசுக்குப் பிடிச்ச ஆளாயிருந்தா நிரந்தரமா வேலைக்கு வைச்சுக்கிறாங்களாம்!” என்றான்.

இதைக் கேட்டதும் ஆவலோடு அவன் முகத்தைப் பார்த்தாள் காமாட்சி. அவள் உள்ளத்தில் மின்னல் போல் ஓர் ஆசை எழுந்தது. அந்த ஆசை கண நேரத்திற்குள்

ளேயே உருத் தேய்ந்து அழிந்துவிட்டது. அடுத்த க்ஷணம் அவனுடைய முகத்தின் பிரகாசம் மறைந்து வாட்டம் கொடுத்தது. “வேலை நிறுத்தம் செய்தவங்க தெருவிலே சாதாரணமாப் போகிற வருகிறவங்களைக் கூடக் கல்லெறிஞ்சு வம்புக்கு இழுக்கிறாங்களாமே! அப்படி யிருக்கும்போது நீங்க அவங்களுக்கு எதிரா மில்லிலே வேலைக்குப் போனா உங்களைச் சும்மா விட்டு வைப்பாங்களா?” என்றாள்.

“அவங்க மிரட்டலுக்கும் உருட்டலுக்கும் பயந்தா எதுவும் நடக்காது. நம்மைப்போல வேலை யில்லாமே கஷ்டப் படறவங்களுக்கெல்லாம் இந்தச் சந்தர்ப்பத்தை விட்டா வேறு வழியே கிடையாது. இப்பவே எத்தனையோ பேரை வேலைக்கு எடுத்துக்கிட்டிருக்காங்களாம். மில்லிலே புதிசா வேலைக்கு வரவங்களுக்குப் பாதுகாப்பா போலீசெல்லா மிருக்குது. நீ வீணா பயந்து சாகாதே! நான் போய்ப் பார்த்துட்டுத்தான் வரேனே!” என்று சொல்லிவிட்டு வெளியே போனான் கந்தசாமி.

காமாட்சியால் அவனைத் தடுக்க முடிய வில்லை. அவன் பத்திரமாகத் திரும்பி வீடு வந்து சேரவேண்டுமே என்று நினைவிற்கு வந்த தெய்வத்தை யெல்லாம் பிரார்த்திக்க ஆரம்பித்தாள்.

★

சுன்னிகா மில்லுக்கு எதிரேயுள்ள மைதானத்தில் தொழிலாளர்கள் கூட்டம் போட்டிருந்தனர். தலைவர்கள் உலகத்தை ஆக்கவும் அழிக்கவும் தொழிலாளர்களால் முடியுமென்பதைப் பெருமைப்பட எடுத்துச் சொல்லிவிட்டு, கடைசி முடிவுரையாக வேலை நிறுத்தத்தை நீடித்து நடத்தும்படி ஆவேசமாகச் சொல்லி முடித்து விட்டு அமர்ந்தனர். “புரட்சி ஓங்குக; முதலாளித்துவம் ஒழிக!” என்ற கூச்சலோடு கூட்டமும் கலைந்தது.

மில்லுக்கு வேலை தேடி வந்த கந்தசாமியின் கவனத்தை இந்தக் கூட்டம் கவர்ந்ததால், அவன் அங்கு நின்று தலைவரின் பிரசங்கத்தையும் தொழிலாளர்களின் பெருத்த கோஷத்தையும் கேட்டான். ஆயிரக் கணக்கான தொழிலாளர்களின் கூட்டமும், தலைவர் ஆதாரங்கள் காட்டி ஆவேசத்தோடு செய்த பிரசங்க மாரியும் அவன் நெஞ்சையும் கலக்கின. மில்லில் நுழைந்து வேலை கேட்கலாமா, வேண்டாமா என்று



குழப்பம் தலையெடுத்தது. அவன் தன் பசியைத் தீர்த்துக்கொள்ள — குடும்பத்தைக் காப்பாற்ற — மில்லில் வேலைக்கமருவது தொழிலாளர்களுக்குச் செய்யும் துரோகமாகுமா? — இந்த விஷயத்தைப் பற்றி யோசித்து அவன் ஒரு முடிவு செய்யவேண்டியிருந்தது. தயங்கியபடியே ஒரு புறமாக நின்றுகொண்டிருந்தான்.

கூட்டம் கலைந்ததும் பேசிக்கொண்டு போன இரண்டு தொழிலாளர்களின் வார்த்தைகள் அவன் மனதில் ஒரு பிரகாசம் ஏற்பட வழி செய்தது.

"ஏம்பா! இப்படியே ஸ்ட்ரைக்கை நீடித்து நடத்துங்கன்னு தலைவருங்க எல்லாம் சொல்லுறாங்களே தவிர வேறு ஒரு வழியும் சொல்லலையே? இப்படியே பிடிவாதமா இருந்தா நம்ம வீட்டு உலையிலே பூனைதான் படுத்து உறங்கணும். வயிறு பசிக்குமேப்பா! அதுக்கு ஒரு யோசனையும் சொல்ல மாட்டேங்கிறாங்களே, இவங்க!" என்றான் ஒருவன்.

"நம்ம பசி பட்டினியைப் போக்கிக்க நாம்தான் வழி செய்துக்கணும். தலைவரு என்ன செய்வாரப்பா? கட்சியைப் பலப்படுத்தத்தானே அவங்க பிரசாரம் செய்யறாங்க!" என்றான் மற்றொருவன்.

இந்த வார்த்தைகள் கந்தசாமியின் காதில் விழுந்தவுடன் ஓர் உண்மை புலப்பட்டது அவனுக்கு. அவரவர்களுடைய பசியைப் போக்கிக்கொள்ள அவரவர்கள்தான் வழி செய்து கொள்ள வேண்டுமென்ற உண்மைதான் அது. அவன் அதிவேகமாக மில்லை நோக்கி நடந்தான்.

*

அன்றைய தினம் செய்த வேலைக்கான கூலி மூன்று ரூபாயை வாங்கிக் கொண்டு வெளியே வந்தான் கந்தசாமி. போலீஸ்காரர்கள் அவனைச் சிறிது தூரம் வரையில் கொண்டுவந்து விட்டுவிட்டுச் சென்றார்கள். அப்பொழுது அவன் மனதில் எதைப்பற்றியும் கவலை ஏற்படவில்லை. அன்று சம்பாதித்த மூன்று ரூபாயைக் கொண்டுபோய்த் தன் மனைவியிடம் கொடுப்பதில்தான் அவனுடைய ஆர்வம் இருந்தது. அவன் அதிவேகமாக வீட்டை நோக்கி நடந்தான். நெடுநாட்களுக்குப் பிறகு காமாட்சியின் சிரித்த முகத்தைப் பார்ப்பதற்கு அவனது உள்ளம் துடியாய்த் துடித்தது.

தெருவிற்குச் சமீபமாக உள்ள சந்தின் திருப்பத்திற்கு அவன் வந்து கொண்டிருந்தான். லாந்தர் விளக்கு சிறிது தூரத்திலிருந்ததால், அங்கே சிறிது இருள் சூழ்ந்திருந்தது. யாரோ ஒருவன் திடீரென்று கந்தசாமியின் முன்னால் தோன்றி அவன் முகத்தில் ஒரு குத்து விட்டான். கந்தசாமி சட்டென்று பாய்ந்து எதிரிலிருந்தவனைப் பிடித்துக் கொண்டான். அவனுடைய பிடியிலிருந்து உதறிக்கொண்டு ஓட யத்தனித்தான் எதிராளி. கந்தசாமி தன் பிடியை நழுவ விடாமல், "தம்பி! ஓடப் பார்க்கிறாயா? தாராளமா ஓடிப் போ! ஆனா முதல்லே நீ ஏன் என்னை அடிச்சேன்னு மாத்திரம் சொல்லிவிட்டு ஓடு! நான் உன்னைத் தூக்கிப் பிடிக்க மாட்டேன்!" என்றான்.

"எதுக்காக அடிச்சேனா? நீ உண்மையான மனிசனாயிருந்தா ஆயிரக்கணக்கான பேரு வேலை நிறுத்தம் செய்திருக்கிற இடத்திலே போய் வேலை செய்ய ஒத்துக்குவாயா?" என்றான் அவன் கோபத்தோடும் பதட்டத்தோடும்.

கந்தசாமி அவனை ஏற இறங்க ஒரு தடவை பார்த்தான். அவன் கன்னிகா மில்லில் வேலை நிறுத்தம் செய்திருக்கும் தொழிலாளர்களில் ஒருவன் என்று அவனுக்குத் தெரிந்து விட்டது. தன் பிடியிலிருந்து அவனை விட்டுவிட்டு, "பதறாதே, தம்பி! உன்னைப்போல கொடுக்கிற கூலி போதாதுன்னு போராடறவங்களெல்லாம் என்னைப் போல் பசி பட்டினியிலே அடிபட்டு வேலை கிடைத்தா போதுமின்னு போறவங்களை அடிச்சுக் கொலை செய்யப் பார்க்கிறீங்க; ஆனால் என்னைப்போல் வறுமையிலே வேலை கிடைக்காமல் கஷ்டப்படுகிறவங்க யாரை அடிச்சுக் கொலை செய்யலாம்னு தான் புரியல்லே! நான் உனக்குத் துரோகம் செய்துட்டேன்னு சொல்லுறே! நான், என் பெண்டாட்டி, பிள்ளைகளெல்லாம் இந்த வயித்துக்குத் துரோகம் செய்ய முடியலையே, இதுக்கு என்ன யோசனை சொல்லுறே?" என்று கேட்டான்.

கந்தசாமியின் எதிரில் நின்ற வாலிபன் சிறிது நேரம் யோசித்தான். தேசத்தில் எவ்வளவு லட்சம் பேர் வேலை இல்லாமல் திண்டாடுகிறார்கள் — எத்தனை லட்சம் பேர் பட்டினி கிடக்கிறார்கள் — பிச்சை எடுக்கிறார்கள் என்பதையெல்லாம் அவன் ஒருவாறு உணர முடிந்தது. அவன் மனதில் இரக்கமும் பச்சாத்தாபமும் ஏற்பட்டன. திடீரென்று கந்தசாமியைத் தாக்கியதற்காக

அவன் வெட்கப்பட்டான். தலை குனிந்த படியே நடக்கலானான்.

இருளில் அவன் தலை மறைவதற்கு முன்னால் கந்தசாமி அவன் காதில் விழும்படியாக, "தம்பி! உங்க தலைவருங்ககிட்டே உங்களை வேலை நிறுத்தம் செய்யச் சொல்லுறதற்கு முன்னாலே தேசத்திலே வேலை இல்லாம பசி பட்டினியிலே சாகிறவங்களுக்கெல்லாம் வேலை தேடித் தர ஒரு யோசனை சொல்லச் சொல்லு!" என்று சொல்லிவிட்டுத் தன் வீட்டை நோக்கி நடந்தான்.

★

மறு நாள் கந்தசாமி வேலைக்கு வந்த பொழுது முதல் நாள் தன்னைத் தாக்கிய வாலிபனும் அவனைச் சேர்ந்த நண்பர்கள் ஐந்தாறு பேரும் வேலைக்கு வந்திருப்பதைப் பார்த்தான். சாயந்திரம் அவர்கள் வேலையை விட்டு வெளியே வந்ததும், மில் வாசலில் நின்று கொண்டிருந்த தொழிலாளர்கள், "கருங்காலிகளே ஒழிக! துரோகிகளே ஒழிக!" என்று கோஷமிட்டனர்.

கந்தசாமி அவர்களுடைய கூச்சலைப் பொருட்படுத்தவில்லை. சில நாட்களுக்கெல்லாம் அவன் கன்னிகா மில்லில் நிரந்தரமாக வேலைக்கு அமர்த்தப்பட்டான். வேலை நிறுத்தத்தில் கலந்துகொண்ட தொழிலாளர்களில் சிலர் மனம் திரும்பி மறுபடியும் வேலைக்கு வந்து அமர்ந்தனர். பிடிவாதமான மனதோடு இருந்த அநேக தொழிலாளர்கள் வேறு எங்கும் வேலை அகப்படாமல் திண்டாடினர்.

வருடம் இரண்டு ஓடியது. கன்னிகா மில்லில் வேலைக்கு அமர்ந்தபொழுது வேலை செய்யும் விஷயத்திலும் சம்பள விஷயத்திலும் கந்தசாமிக்குத் திருப்தியாகத்தான் இருந்தது. ஆனால் ஒரு வருடம் சென்ற பிறகு மறுபடியும் வெளியேயுள்ள தலைவர்கள் தொழிலாளர்களிடம் வந்து அவர்களுக்குள்ள அநேக குறைகளை எடுத்துக் காட்டினர். முதலாளிகளோடு போராடும்படித் தூண்டினர். இரண்டு வருடங்களுக்குப் பின் மறுபடியும் கன்னிகா மில்லில் வேலை நிறுத்தப் புயல் வீசியது. மற்ற தொழிலாளர்களைப் போல் கந்தசாமியும் தனக்குள்ள குறைகளை உணரலாரம்பித்தான். முதலாளிகள் தங்கள் உழைப்பில் கொழுப்பதாகவும், தொழிலாளர்கள் வறுமை நிலையில் வாடுவதாகவும் அவனுக்கும் தோன்றியது. தலைவர்களின் பேச்சு அவனை உருக்கியது. வேலைநிறுத்தம் செய்த தொழிலாளர்களில் அவனும் ஒரு முக்கியமானவனாகிவிட்டான்!

கன்னிகா மில்லில் வேலை நிறுத்தம் ஆரம்பித்து ஒரு வார மாகிவிட்டது. தொழிலாளர்களின் ஊர்வலம் கோஷம் முதலியவைகளெல்லாம் போலீஸ்காரர்களுக்கும் பொதுஜனங்களுக்கும் கவலை கொடுக்க ஆரம்பித்தன. வேலையே இல்லாமல் பசி பட்டினியால் வாடும் தொழிலாளர்களுக்குக் கன்னிகா மில் வேலை நிறுத்தம் ஒரு வழி காட்டியது. நூற்றுக்கணக்கான புதிய தொழிலாளர்கள் கன்னிகா மில்லில் பழைய தொழிலாளர்களின் ஸ்தானத்தில் வந்து அமர்ந்தனர். வேலை நிறுத்தம் செய்து கூட்டம் போட்டுக் கோஷமிடும் பழைய தொழிலாளர்கள் புதிதாக வேலைக்கமர்த்தப் பட்டவர்களைப் பார்த்து, "கருங்காலிகளே, ஒழிக! துரோகிகளே, ஒழிக!" என்று கோஷமிட்டனர்.

அவ்வாறு கோஷமிட்டவர்களின் முன்னணியில் நின்று கொண்டிருந்தவன் யார் என்கிறீர்கள்? — கந்தசாமிதான்!



பெண்மணி :—ஸ்டேஷன் மாஸ்டர் ஸார்! வடக்கே யிருந்து வரும் வண்டி எப்போது வரும்?

ஸ்டேஷன் மாஸ்டர் :—அடடா! கொஞ்சம் முன்னாலே வரப்படாதா? இப்பத்தானே போயிற்று?

பெண்மணி :—தெற்கே யிருந்து?

ஸ்டேஷன் மாஸ்டர் :— இல்லை, இப்போது அந்தப் பக்கத்திலிருந்து ஒரு வண்டியும் இல்லை.

பெண்மணி :—கமலா, வா! நாம் பயமில்லாமல் தண்டவாளத்தைத் தாண்டிப் போகலாம்!




**வித்தியாசம் இல்லை !**

**ஒருவர் :**—பையா, இந்த நாய்க்கு ஒரு நல்ல ரொட்டியாய்க் கொடு ; நாய்தானே என்று மட்டரகமானதாய்க் கொடுத்து விடாதே !

**கடைக்காரப் பையன் :**—என்னுங்க ஸார் ! அப்படிச் சொல்றீங்க ? அந்த மாதிரி நீங்க வேறே நாய் வேறேன்னு நம்ம கடையிலே வித்தியாசம் பார்க்கிறதில்லேங்க !

★

**வருத்தம்**

**வாக்கீலில் வந்தவன்** (கோபமாக) :—எந்த மடையன்தான் உனக்குக் கார் ஓட்டக் கற்றுக் கொடுத்தானோ ?

**டிரைவர்** (நிதானமாக) :—ஐயா, அது பாரதம். அந்தக் கதை முழுவதையும் இப்பொழுது சொல்லச் சௌகரியப்படாததற்கு வருந்துகிறேன்.

★

**ஓகோ !**

**நண்பர் :**—உங்கள் பையன் நூற்றுக்கு நூற்றுப் பத்து மார்க்கு வருமென்று சொல்லிக் கொண்டிருக்கிறான், அது எப்படி?

**தகப்பனர் :**—என்னிடம் கூட அப்படித் தான் சொன்னன். எல்லாக் கேள்விகளுக்கும் பதில் எழுதிவிட்டு, பேப்பரில் கேட்காத ஒரு கேள்விக்கும் அவன் பதில் எழுதி இருக்கிறானம் !

★

**சரிதான் !**

"எத்தனை தடவைதான் உனக்குச் சொல்லுகிறது ? 'பெரியவாள் பேசுகிற போது குறுக்கே பேசாதே ; அவர்கள் தங்களுடைய பேச்சை நிறுத்தின பிறகு பேச' என்று சொன்னால் ஏன் கேட்க மாட்டேன் என்கிறாய் ?"

"சரி, அப்பா ! ஆனால் பெரியவாள்தான் பேச்சை நிறுத்துகிறதே இல்லையே !"

**தீர்ந்துவிடும் !**

**மனைவி :**—எதிர்த்த வீட்டு மாமி என்னைப் பார்த்துச் சிரிக்கிறாள்—"உனக்குச் சமைக்கிறதைத் தவிர வேறு ஒன்றுமே தெரியாதா ?" என்று கேட்கிறாள்.

**கணவர் :**—அந்த மாமி ஏன் அப்படிச் சந்தேகப்படணும்? ஒரு நாளைக்கு அவர்களை அழைத்துச் சாப்பாடு போட்டுவிட்டால் போகிறது !

★

**நியாயத்தின் பலன் !**

**வக்கீல்** (குற்றவாளியைப் பார்த்து) :—நீ தண்டனை அடைந்ததில் எனக்கு ரொம்ப மனவேதனை ஏற்பட்டுவிட்டது. நானும் எவ்வளவோ வாதாடினேன். ஜூரார்களிடம் 'நியாயம் வழங்கவேண்டும்' என்று எப்படிக் கதறினேன் ! உனக்கே தெரியுமே !

**குற்றவாளி :**—நியாயம் வழங்க வேண்டும் என்று உங்களை யார் கேட்கச் சொன்னது ? அதனுடைய பலன்தான் இப்படியாயிற்று !

★

**நல்ல தைரியம் !**

"நம்ப ராமசாமியின் மகன் கையில் காலணு இல்லாமல் பட்டணம் போனான். அங்கு யாரிடமோ நூறு ரூபாய் கடன் வாங்கி ஒரு தொழிலில் இறங்கினான். இப்போது



ரொம்ப சௌகரியமாக இருக்கிறான். அவனுக்கு என்ன தைரியம் !"

"அவன் தைரியத்தைக் கொண்டு போய்க் குப்பையில் போடு. அவனை நம்பிக் கடன் கொடுத்தானே, அவனுடைய தைரியத்தைப் பற்றி என்ன சொல்லுகிறாய் ?"

# புரிந்தது!



விளையாடுவதற்கு முயல் வேண்டும். எங்கேயாவது ஒன்று சம்பாதியேன்.
முயலா? எனக்குத் தெரியாதே!




வெள்ளையாய்க் காது நீளமாக இருக்குமே, அது-தானடா!
விளங்கவில்லீங்களே!




சின்னப் பிராணி; அது இவ்வளவு உயரம்தான் இருக்கும்!




இப்படித் தத்தித் தத்தி ஓடும். முயல்டா, முயல்!
நன்றாய்ப் புரியும்படி சொல்லுங்க!




இன்னும் புரியவில்லையா? கண் பெரிசாய், உன் மூஞ்சி மாதிரி இருக்கும்!




முசலுங்களா? முசல் என்று அப்பொழுதே சொல்லப்படாதா?



# அறியாப் பருவத்திலே!

**எஸ். வி. எஸ்.**

★ ● ★

எனக்குத் தமிழ் இலக்கியங்களில் சற்றுப் பைத்தியம் உண்டு என்னும் விஷயம் என் வீட்டுக்கு அக்கம் பக்கத்திலுள்ளவர்களுக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் அன்று அந்தப் பையன் "மாமா, 'ஞாலம் கருதினும் கைகூடும்' என்ற குறளுக்கு அடுத்த அடி என்ன மாமா? எவ்வளவுதான் ஞாபகப் படுத்திக்கொண்டு பார்த்தாலும் ஞாபகத்துக்கு வரமாட்டேன் என்கிறது" என்று கேட்டான். நான் லேசாகச் சிரித்துக் கொண்டே அடுத்த அடியைச் சொல்லியனுப்பினேன். அவன் ஒரே சந்தோஷத்தில் துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடினான்.

அவன் சந்தோஷத்தைப் பார்த்தபோது எனக்கும் சந்தோஷம் ஏற்பட்டது. உணர்ச்சிகளே தொத்து நோய்போலத்தானே; நம் பக்கத்திலிருப்பவரின் உணர்ச்சிக்குத் தக்கபடி நம் உணர்ச்சிகளும் தொழிற்படுகின்றன.

ஆனால் என் சந்தோஷம் நீடிக்கவில்லை. அந்தப் பையன் எப்படி ஒரு அடியை மட்டும் ஞாபகத்தில் கொண்டு, அடுத்த அடி ஞாபகம் வராமல் தவித்தானோ அதேமாதிரி வெகு நாட்களுக்கு முன்னர் நான் தவித்தது ஞாபகம் வந்தது. அதனால், நான் இப்பொழுதெல்லாம் எதுவுமே மறப்பதில்லை என்பதல்ல அர்த்தம். நினைவிலிருப்பதும் மறப்பதும் என்செயல் அல்ல. ஆனால் பத்து வருஷத்துக்குமுன் ஒரு அடி ஞாபகத்தில் வைத்துக்கொண்டு மற்ற அடிகள் நினைவு வராமல் தவித்ததில் ஒரு சரித்திரம் புதைந்து கிடக்கிறது.

சுமார் பத்து வருஷங்களுக்கு முன்னிருக்கும். நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். ஒருநாள் எப்படியோ திடீரென்று என்வாய் என்னை அறியாமலே,

"யாரோ—இவர் யாரோ?
என்ன பேரோ?—அறியேனே!"

என்ற பாட்டின் முதல் அடியை முணுமுணுத்தது. அந்தப் பாட்டை எப்போதோ யாரோ பாடக் கேட்டிருக்கிறேன். ஆனால் யார் என்பது நினைவுக்கு வரவில்லை. அடுத்த அடி என்ன என்பது நினைவுக்கு வரவில்லை.. எப்படியெல்லாமோ முயற்சி பண்ணிப் பார்த்தேன், நினைவுக்கு வரவே இல்லை. 'இதற்கடுத்த அநுபல்லவி வெகு அழகாகப் பிணைத்துக் கொண்டு நிற்குமே. முன்னே கேட்டிருக்கிறேனே! அந்த இன்ப உணர்ச்சி இன்னும் மனதில் இருக்கிறதே! ஆனால்... ஆனால்...அந்த அற்புதமான வார்த்தைகளும் விஷயமும் ஞாபகத்துக்கு வரமாட்டேன் என்கிறதே' என்று என் மனசு படாத பாடு பட்டது! அந்த அடியை என் நாவில் உச்சரிக்க, உச்சரிக்க அது தன் காதலியைப் பிரிந்து ஏக்கமுறுவது போல் எனக்குத் தோன்றியது.

இப்படி நான் தொல்லைப் பட்டுக்கொண்டிருந்த போதுதான் என் தந்தையிடமிருந்து கடிதம் வந்தது. வெகு ஆவலாகப் பிரித்துப் பார்த்தேன். 'சே! இவ்வளவுதானா! அதே பழைய பல்லவிதானா!' என்று தோன்றிற்று.

நான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்று வற்புறுத்திக் கொஞ்ச நாட்களாக என் தந்தை எனக்கு எழுதிக் கொண்டிருந்தார். 'நல்ல நல்ல இடங்களிலிருந்து வரன் கேட்டுவிட்டுப் போகிறார்கள். சீக்கிரம் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்' என்று அடிக்கடி எழுதுவார். அதற்கெல்லாம், "கல்யாணத்துக்கு இப்பொழுது என்ன அவசரம், பார்த்துக் கொள்ளுவோம்" என்றே எழுதி வந்தேன்.

இவ்விதம் எழுதியதற்கும் காரணமுண்டு. என் கல்யாண விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்துக் கடிதம் வரும்போதெல்லாம் என் மனதில் ஒருவிதமான வேதனை ஏற்படும். எனக்கு எப்பொழுதோ கல்யாணமாகிவிட்டது போன்ற உணர்ச்சியும் அந்தக் காதலியைக் காணாமல் தவிப்பது போன்ற உணர்ச்சியும் ஏற்படும். என் 'யாரோ இவர் யாரோ' என்ற பாட்டின் பல்லவியாக நான் இருந்தேன். என் அநுபல்லவியைக் காணாது தவித்தேன்.

ஆனால் அன்று வந்த கடிதத்தின் போக்கு இனியும் நான் ஒத்திப் போட முடியாத வகையில் வந்திருந்தது.

ஏதோ ஒரு இடம், அவருக்கு ரொம்பவும் பிடித்திருந்ததாம். அந்த இடத்தைக் காரணமின்றித் தட்டிக்கழிக்க அவருக்கு மனமில்லையாம். ஆனால் பெண்ணை நான் பார்த்துவிட்டுப் பிறகு சம்மதம் தெரிவிக்கலாம் என்று எழுதியிருந்தார்.

எனக்கு ரொம்பவும் தர்மசங்கடமாக இருந்தது. அப்பாவுக்கு இந்தச் சமயமும் வன்மையாக மறுத்து எழுதத் துணிச்சல் ஏற்படவில்லை. 'பெண் பார்க்க வருகிறேன்' என்று எழுதிவிட்டேன். பின்னர் 'பெண் பிடிக்கவில்லை' என்று சொல்லிக்கொண்டால் போகிறது என்ற தைரியத்தில்தான் அவ்வாறு எழுதினேன்.

இன்னும் வளர்த்துவானேன்? நான் பெண் பார்க்கச் சென்றேன். சென்ற இடத்தில் என் 'தீர்மான'த்தை அவிழ்த்து விட முடியவில்லை. 'பெண் பிடிக்கவில்லை' என்று என்னால் சொல்ல முடியவில்லை!

சாதாரணமாகப் பெண்பார்க்கும் கூத்து நடப்பது போல் அன்றும் நடந்தது. அவள் ஏதோ ஒரு டிபன் தட்டு எடுத்துக் கொண்டு என் முன்னிலையில் வந்தாள். நான் டிபனைப் பார்க்கவில்லை; அவளைத்தான் பார்த்தேன். பார்த்ததும் எனக்குத் துணுக்குற்றது. 'இவளை நாம் ஏற்கெனவே எங்கேயோ பார்த்திருக்கிறோமே!' என்று தோன்றியது. எங்கே எப்பொழுது என்பது பற்றி ஒரு க்ஷணந்தான் யோசித்திருப்பேன், — பால்ய நினைவுகள் வெகு பசுமையானவையல்லவா? ஞாபகம் வந்துவிட்டது.

நான் பத்து வயதுச் சிறுவனாக இருந்தபோது எங்கள் அப்பா ஊர் ஊராக மாற்றப்படும் உத்தியோகங்களில் ஒரு உத்தியோகம் செய்து வந்தார். இந்த வருஷம் ஒரு தெலுங்கு ஜில்லாவில் வேலை செய்தால் அடுத்த வருஷம் கன்னட ஜில்லாவுக்கும் அதற்கடுத்த வருஷம் தெலுங்கு ஜில்லாவுக்கும் மாற்றி விடுவார்கள். இதனால் குழந்தைகளின் படிப்புக் கெடுகிறது என்று என் மாமாவிடம் எனக்குப் பத்து வயது நிரம்பு முன்னே அனுப்பி வைத்தார். நான் எங்கள் மாமாவுடன் இருந்துதான் 'ஸ்கூல் பைனல்' வரை படித்தேன்.

மாமாவிடம் போன புதிதில் எனக்கு அடிக்கடி அப்பா அம்மா நினைவு வரும். பெரிய லீவிலாகிலும் அப்பாவிடம் போக வேண்டும் என்று தோன்றும். ஆனால் அப்போது அப்பா தெலுங்கு ஜில்லாவில் விசாகப்பட்டணத்திலிருந்தார். தமிழ் நாட்டிலிருந்து அவ்வளவு தூரம் ஒன்றரை மாதம் லீவைக் கழிப்பதற்காக என்னை அனுப்ப வேண்டாம் என்று என் மாமாவுக்கு எழுதி விட்டார். அப்பொழுது என் அப்பாவின் மேல் எனக்குண்டான ஆத்திரத்துக்கும் கோபத்துக்கும் அளவில்லை. எனக்கு, சுமாராக விவரம் தெரிந்த வயதாக இருந்தால் அழுது பிரலாபித்துக் காரியம் சாதித்துக் கொள்ளவும் முடியவில்லை. என் துக்கத்தையெல்லாம் இதயத்திலேயே அடக்கித் தனிமையான இடம் பார்த்து இதயபாரம் குறையும் அளவு அழுது தீர்த்துவிட்டு வருவேன்.

## எல்லாம் சொந்தம்!






என் மாமா வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் ஒரு தாசில்தார் இருந்தார். அவருக்கு என்னைவிட இரண்டு வயது சிறிய ஒரு பெண் இருந்தாள். அந்தப் பெண்ணை அவரும் தம் மைத்துனர் வீட்டில் விட்டிருந்தார். கோடை விடுமுறைக்கு அவள் தன் பெற்றோரிடம் வந்திருந்தாள். அவள் பெயர் நாகம்.

முதல் நாள் தான் நாகம் என்னுடன் பேசச் சங்கோசப் பட்டுக் கொண்டிருந்தாள். அடுத்த நாள் எப்படியோ நாங்கள் சிநேகஞ் செய்துகொண்டு விட்டோம். எப்படி எங்கள் நட்பு ஆரம்பித்தது என்று இப்போது எண்ணி எண்ணிப் பார்க்கிறேன்; நினைவுக்கு வரவில்லை.

சிநேகம் ஆனபின் நாங்கள் ஓயாமல் பேசிக் கொண்டிருப்போம். காலையில் பேசுவோம். மத்தியானம் பேசுவோம், மாலையில் பேசுவோம். இராத்திரி கண்ணுக்குத் தூக்கம் பிடிக்கிற வரைக்கும் பேசுவோம்.

அப்படி என்ன இருக்கும் எங்கள் இருவருக்கும் பேசுவதற்கு என்று அப்பொழுது என் மாமியும் நினைத்தாள். நாகத்தின் அம்மாவும் நினைத்தாள். இத்தனை வருஷங்களுக் கப்புறம் இப்பொழுது நான் எண்ணிப் பார்க்கிறேன். எனக்கும் அந்த விஷயம் புரியவில்லைதான்.

ஆனால் ஒன்றுமட்டும் நன்றாக நினைவிருக்கிறது. "லீவில் என் பெற்றோரிடம் போக முடியவில்லையே!" என்று நான் ஏங்கிய ஏக்கம் எவ்வளவு நியாயமானது என்பதை அவள் பரிபூரணமாக உணர்ந்தாள். என்னுடைய நிலைமையைக் கண்டு இரங்கிப் பரிபூரணமாக அனுதாபப்பட்டாள்.

அவ்விதம் தன் அனுதாபத்தைத் தெரிவிக்கும் பொழுதெல்லாம், "நாகம், என் அப்பா அம்மாவிடம் போக முடியவில்லையே என்ற துக்கம் எனக்குப் பெரிதாக இருந்தாலும், என் துக்கம் என்ன என்று புரிஞ்சுக்க நீயாவது கிடைச்சையே! அதுக்கு நான் எவ்வளவோ சந்தோஷப்படறேன்" என்று என் இதயத்தில் நன்றி ஊற்றுப் பெருகச் சொல்லியிருக்கிறேன். நன்றாக நினைவிருக்கிறது. ஆனால் அது எவ்வளவு பெரிய வார்த்தை! பத்து வயதுப் பையன் சொல்லக்கூடிய வார்த்தையா அது!

ஒருநாள் அவளுக்குக் கடுஞ்சுரம் வந்துவிட்டது. தாசில்தார் 'காம்ப்' புறப்பட்டுப் போய்விட்டார். வீட்டில் புருஷத் துணை யாரும் இருக்கவில்லை. நான்தான் டாக்டரிடம் ஓடவும், மருந்து வாங்கிவரவும், மருந்து கொடுக்கவும் செய்தேன். இதனால் எல்லாம் எங்கள் இருவர் சிநேகமும் நெருக்க முற்றது. நான் செய்த தொண்டை நாகமும், அவள் அம்மாவும் ரொம்பவும் பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள். அவள் அம்மா "அடுத்தகத்து அம்பியினாலேதான் நாகம் புனர்ஜன்மம் எடுத்தாள். அவன் இல்லேன்னா நாகமும் நமக்கில்லைதான்" என்று தாசில்தாரிடம் ஒரு நாள் கூறினாள்.

லீவு ஒன்றரை மாதம் முடிந்து விட்டது. நாகம், என்னிடம் அழாக் குறையாக விடை பெற்றுச் சென்றாள். நானும் அழாக் குறையாகத்தான் விடை கொடுத்தனுப்பினேன். அவள் போகும்போது, "பிழைச்சு கிடந்தால், நவராத்திரி லீவுக்கு வருவேன்; அப்போது பார்க்கலாம்" என்றாள்.

அவளும் பிழைத்துக் கிடந்தாள். நானும் தான் பிழைத்துக் கிடந்தேன். ஆனால் அவள் அப்பாவுக்கு நவராத்திரி லீவுக்குள் மாற்றலாகி வேறு ஊருக்குப் போய்விட்டார்.

அதற்குப் பிறகு எத்தனை வருடங்கள் உருண்டோடிவிட்டன! அதற்குப் பிறகு இன்றுதான் நாகத்தை அவள் மாமா வீட்டில் பார்க்கிறேன். நாகம் இன்று எப்படி வளர்ந்திருக்கிறாள்! எவ்வளவு அழகாக இருக்கிறாள்!

• • •

இத்தனை சிந்தனையும் ஒரு கணந்தான் என் மனசில் நிகழ்ந்தது.

பின்னர் வீணையை எடுத்து வைத்துக் கொண்டாள். மூன்று நிமிஷம் பைரவி ராகத்தின் களையைக் காட்டிவிட்டு மெல்லிய குரலில் 'யாரோ இவர்——யாரோ என்ன பேரோ——அறியேனே!' என்று பாடினாள். எனக்கு மயிர்க் கூச்சிட்டது. நான் அடைந்த மகிழ்ச்சி இவ்வளவு அவ்வளவு என்று சொல்லி முடியாது.

அந்த நாளில் ஒரு நாள் நாகம் ஒரு வெள்ளிக் கிழமையன்று மாலை விளக்கு வைத்து விட்டு, அவளுடைய அம்மா பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு பாடிக் கொண்டிருந்தாள். அப்போது அவளை விளையாட அழைக்கச் சென்ற என்னை, கடைக்கண்ணால், சற்றுப் பொறுக்கச் சொல்லி விட்டு இந்தப் பாட்டைத் தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தது ஞாபகம் வந்தது. அன்று கேட்ட பாட்டு! இன்றுதான் மறுபடியும் கேட்கிறேன். மற்ற அடிகள் என்ன என்று தெரியாமல் தவித்த என் நெடுநாள் ஏக்கமும் தீர்ந்தது!

நமது இலங்கைக் கடிதம்

# நல்ல சகுனங்கள்

ரஜனி

கொழும்பு, மே. 8.

அடுத்தபடியாக நடக்கப்போவதென்ன? இந்தக் கேள்விதான் இலங்கையில் இன்று எங்கும் கேட்கப்படுகிறது. அரசாங்கம் இயற்றிய சட்டங்களுக்கு இலங்கை இந்தியர் சமூகமும் காங்கிரஸும் தங்களுடைய பதிலைத் தெரிவித்து விட்டன. மேற்கொண்டு அரசாங்கம் என்ன செய்யப் போகிறது? இந்தியர்கள் தங்களுடைய நியாயமான உரிமைகளைப் பெறுவதற்குப் போராடித்தான் தீர வேண்டுமா? அல்லது சமரசத்துக்குக் கதவு திறக்கப்படுமா? என்பதை நிர்ணயிக்கும் பெரிய பொறுப்பு பிரதமர் சேனநாயகா கையில் இருக்கிறது.

## காங்கிரஸ் தலைவரிடம் நம்பிக்கை

பொழுது விடிந்தால் இந்தியர்களையும் இந்திய காங்கிரஸையும் ஏசுவதைத் தவிர வேறு ஒன்றும் தெரியாத சிங்களவர்களின் பத்திரிகைகள் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ராஜலிங்கத்தினிடம் நம்பிக்கை வைத்து அவர் மூலமாகச் சமரசம் ஏற்பட்டு விடுமென்று எதிர்பார்ப்பதாக எழுதியிருக்கின்றன. அரசாங்கத்தின் ஊதுகோல்களாக விளங்கும் அந்தப் பத்திரிகைகள் அவ்வாறு தங்களுடைய தொனியை மாற்றிக் கொண்டிருப்பது ஒரு புதுமை யென்பதில் சந்தேகமில்லை. இந்திய காங்கிரஸுக்கு ஒரு உண்மையான தலைவர் இப்பொழுதுதான் ஏற்பட்டிருக்கிறா ரென்றும் அவர் இந்தியர்களைச் சரியான பாதையில் நடத்திச் செல்லுவாரென்பதில் சந்தேகமில்லை யென்றும் ஒரு பத்திரிகை எழுதியிருக்கிறது.

சர்க்கார் கட்சிப் பார்லிமெண்டு அங்கத்தினர்களிடையிலும் கூட இந்தியாவுடன் ஏதாவது ஒருவித சமரசத்துக்கு வந்து விட்டால் நல்லதென்ற அபிப்பிராயம் நாளுக்கு நாள் வலுவடைந்து வருகிறது. மந்திரி பதவிகளில் இல்லாத சர்க்கார் கட்சிப் பார்லிமெண்டு அங்கத்தினர்களில் சிலர் உத்தியோகப் பற்றற்ற முறையில் சென்னைக்கும் டில்லிக்கும் விஜயம் செய்து சமரசத்துக்குப் புதிய வழி வகைகளை ஆராயப் போவதாய்ப் பேச்சுகள் அடிபடுகின்றன. இதற்கிடையில் காங்கிரஸ் தலைவர்கள் தோட்டத்துக்குத் தோட்டம் சென்று நிலைமையைத் தொழிலாளருக்கு எடுத்துச் சொல்லி அவசியமானால் சத்தியாக்கிரகத் தீயில் குதிப்பதற்கு அவர்களை ஆயத்தப் படுத்தி வருகிறார்கள். காங்கிரஸ் திட்டம் போராட்ட நிதி தொழிலாளர் எவ்விதத் தியாகத்துக்கும் தயாரென்பதைக் காட்டு வதாயிருக்கிறது.

## பிடிவாதம் தணிகிறது

இன்னும் சில சுப சகுனங்கள் தோன்றுவதையும் இங்கு குறிப்பிட வேண்டும். ஹட்டன் மகாநாட்டில் இந்தியத் தோட்டத் தொழிலாளர் நிலைமையைப் பற்றிக் காங்கிரஸ் லேபர் யூனியன் சில தீர்மானங்களை நிறைவேற்றியது. முன்பெல்லாம் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டால் அவைகளை யாரும் லக்ஷியம் செய்வதில்லை. இம்முறை அந்தத் தீர்மானங்களின் அடிப்படையில் சமரச முடிவுகள் செய்யக் காங்கிரஸ் லேபர் யூனியன் பிரதிநிதிகளையும் தோட்ட முதலாளிகளின் பிரதிநிதியையும் அழைத்து லேபர் கமிஷனர் ஒரு மகாநாட்டைக் கூட்டினர். தொழிலாளி — முதலாளி தகராறுகளில் சமரசம் செய்வதற்கு அடிப்படை ஒப்பந்தமொன்றைத் தயாரிக்க இந்த மகாநாடு ஒரு உப கமிட்டியை நியமித்திருக்கிறது. ரப்பர் தோட்டங்களிலிருந்து இந்தியத் தொழிலாளர் ஆயிரக்கணக்கிலே வேலையிலிருந்து தள்ளப்படுவதைப் பற்றி விவாதிக்க மற்றொரு மகாநாடு கூட்டுவதென்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

ரப்பரை ருஷ்யாவுக்கு விற்க முடியாதென்று இதுவரை பிடிவாதமாக மறுத்து வந்த இலங்கை அரசாங்கம் ஆங்கிலோ — அமெரிக்க நாடுகளிடம் படிப்படியாக நம்பிக்கையை இழந்து தனது பழைய தீர்மானத்தை இப்பொழுது மாற்றிக் கொண்டிருப்பதாகவும் தெரிகிறது. இலங்கை ரப்பரை வாங்குவதுபற்றி பேச்சு வார்த்தைகள் நடத்த ஒரு சோவியத் வர்த்தகப் பிரதிநிதி கூடிய சீக்கிரம் இங்கு வரவிருக்கிறார். ருஷ்யாவுக்கு ரப்பரை விற்பதாயிருந்தால் பல்லாயிரக்கணக்கான இந்தியத் தொழிலாளர் வேலைகளை இழந்து நிர்க்கதியான நிலைமையை அடையாமல் தடுக்கலாம்.

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 253. பொன்னுக்குள் பொற்கொல்லன்!

**வா**ன் முகடும் நாலா திக்கும் நிறைந்து நின்ற நரசிம்ம மூர்த்தியை நோக்கிப் பிரமதேவன் பேசுகிறதாக விஷயம்:—

"மழை பெய்யும் போது தண்ணீர் வானத்தில் இருந்து கீழே விழுவதைப் பார்க்கிறோம். அந்தத் தண்ணீருக்கு வானத்தில் இருக்கும் போது மேகம் என்று பெயர். தாரை தாரையாய்க் கீழே விழுந்து கொண்டிருக்கும் போது மழை என்று பெயர். பூமியில் விழுந்து ஓடும்போது நீர் என்று பெயர். மூன்றும் ஒரே வஸ்துதான். அந்த ஒரு வஸ்துவுக்குத்தானே பலவாறாகப் பெயர் சொல்லி அழைக்கிறோம்.

"அதே போல நீ ஒரு வஸ்துவாய் இருக்கிறாய். ஆனாலும் பல உருவங்கள் எடுத்து அவைகளுக்கு உரிய பெயர்களோடு நிற்கிறாய். உன்னைத் தவிர்த்து வேறு ஒரு வஸ்துவும் இந்தப் பேரண்டத்தில் இல்லை. உனக்குத் துணை கிடையாது. அடடா! தன்னந் தனியாக (தமியை) அல்லவா இருக்கிறாய்?"

பேரை ஒருபொருட்கே
பல்வகையாப் பேர்த்(து)என்னும்
தாரை நிலையை,
தமியை, பிறர் இல்லை:—
ஆரைப் படைக்கின்ற(து)!
ஆரை அளிக்கின்ற(து)!
ஆரைத் துடைக்கின்ற(து)
ஐயா அறியோமால்!

[பேரை ஒரு பொருட்கே பல்வகையாப் பேர்த்து என்னும்: ஒரே பொருளுக்குப் பல வகையாகப் பெயரைக் கொடுத்து வெவ்வேறென்று எண்ணும்படி இருக்கிறாய்; தாரை நிலையை: பொழியும் மழையின் தன்மையோடு ஒத்திருக்கிறாய்; தமியை பிறர் இல்லை; நீ தன்னந்தனி. வேறு யாருமே இல்லை.

இந்த நிலையில்—ஆரைப் படைக்கின்றது: வேறொருவரும் இல்லாமல் இருக்கிற நிலையில் யாரையாவது படைப்பது என்பது உண்டா; ஆரை அளிக்கின்றது: வேறு ஒருவரைக் காப்பாற்றுவது உண்டா, இருக்கட்டும்; ஆரைத் துடைக்கின்றது: யாரையாவது கொல்லுகிறது என்பது ஏது; ஐயா அறியோமால்: கடவுளே உம்முடைய காரியம் எனக்கு விளங்கவில்லையே!]

குறிப்பு:—ஒரே வஸ்துதான் பேரண்டத்தில் உண்டு. அதுதான் கடவுள். அந்தக் கடவுளின் தோற்றமே பலவேறு வகைப்பட்ட பொருள்களும் உயிர்களும். உண்மை இப்படி இருக்க இரணியனை இறைவன் (நரசிம்ம மூர்த்தி) கொன்று விட்டான் என்பது ஏற்படுமா? ஏற்படாது.

இந்த உண்மையை வெகு அற்புதமான முறையில் அரிய தாஸ்ய பாவத்தோடு விளக்குகிறது செய்யுள்.

• •
•

**பி**ரமனுக்குத் தன் நிலைமை பேரண்டத்தில் இன்னது என்று தெரியவில்லையாம்:

"இறைவனே, பேரண்டத்தில் நீ தான் ஒரு வஸ்துவாய் நிறைந்து இருக்கிறாய். அநாதியாய் என்றுமாய் நிறைந்திருக்கிறாய். யார் என்ன செயல் செய்தாலும் அது உன் செயல்தான். உண்மை அப்படி இருக்க என்னுடைய சிருஷ்டி என்னுடைய வேலை என்று குறித்துச் சொல்ல எனக்கு என்ன இருக்கிறது!"

நின்னுளே என்னை
நிருமித்தாய்; நியல்லா(து)
என்னுளே எப்பொருளை
யாவரையே யானின்றேன்;

பின் இலேன் முன் இலேன்
எந்தை பெருமானே,—
பொன்னுளே தோன்றியதோர்
பொற்கொல்லன் போல்கின்றேன்.

[நின் உன்னே: உன்னுடைய பூரணத்துவத்துக்கு உள்ளே; என்னை நிருமித்தாய்: சிருஷ்டி தத்துவமாகிய என்னுடைய தத்துவத்தை ஏற்படுத்தினும்; நீயல்லாது என்னுளே எப்பொருளை யாவரையே யான் ஈன்றேன்: எந்தப் பொருளை உண்டாக்கினாலும் எந்த உயிரை உண்டாக்கினாலும் உன்னை உண்டாக்கினேன் என்று தானே சொல்ல வேண்டும்; பின் இலேன் முன் இலேன்: நீ தானே ஆதியும் அந்தமும், அதனால் உனக்கு முன்னும் நான் இருந்தேன் என்பது கிடையாது. அப்படியே உனக்குப் பின்னும் நான் இருப்பது என்பது கிடையாது; பொன்னுளே தோன்றியதோர் பொற் கொல்லன் போல்கின்றேன்: உன் மயம் பொன்மயம் என்று வைத்துக் கொண்டால், அந்தப் பொன்னுக்குள் ஒரு பொற் கொல்லனை அந்தப் பொன்னே சிருஷ்டித்துக் கொண்டது என்ற நிலையில்தான் என் காரியம் இருக்கிறது! வெகு விசித்திரம்! என்று பிரமன் சொல்லுகிறான் நரசிம்மமூர்த்தியை நோக்கி.]

* * *

ஒன்று, பேர் இதிகாசத்துக்குத் தக்கவாறு பேரண்டம் முழுதும் வியாபித்துள்ள நரசிம்ம மூர்த்தியை நமக்குக் காட்டி ஆகிவிட்டது.

இரண்டு, இரணியன் தன்னுடைய ஆணவம் நிர்மூலம் ஆகவும் இறைவனுடைய தத்துவத்தில் ஒன்றாய்க் கலந்து விட்டான்.

மூன்றாவதாகச் சிருஷ்டி தத்துவம் (பிரமன்) முழுதுமே இறைவனது முன்னிலையில் நின்று தன்னுடைய உண்மையான நிலையை வெகு நயமாய் எடுத்துச் சொல்லுகிறது.

பிரமதேவனது காரியத்தைப் பார்த்தாய் விட்டது. அடுத்தாற்போல பிரகலாதனைத்தான் பார்க்க வேண்டும்.

## வட நாட்டு ஆதிக்கம்!






கை காட்டி மரத்தில் இரத்தச் சிவப்பு நிறத்தில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. மினுக் மினுக்கென அது மின்மினிப் பூச்சி போல் மின்னிக் கொண்டிருந்தது. மையிருட்டிலே அந்த விளக்கொளி சிவந்த ஒற்றைக்கண் பைசாசம் விழிப்பதைப் போன்றிருந்தது.

கையில் ஒற்றை லாந்தருடன் மெள்ள மெள்ள ஸ்லீப்பரின்மேல் காலை வைத்துக் கொண்டு கையிலுள்ள செம்மட்டியால் 'லொடக்' 'லொடக்' என்று தட்டிக் கொண்டு வந்தான் காங்கிக் கூலி கங்காதரன்.

வெண்ணாறு பாலத்திலிருந்து மூன்றுவது மைல்கல் வரையில் அவன் பார்த்தாக வேண்டும். புகை ஏறிய அந்த லாந்தரை ஆட்டிக்கொண்டு அவன் எதிலோ நினைவாகச் சென்றாலும் ஒரு கண் தண்டவாளத்தின் மீதிருந்தது.

அந்த 'லொடக் லொடக்' சப்தத்தில் ஏதோ வித்தியாசம் தென்படவே அப்படியே ஒருகணம் நின்றுவிட்டான் கங்காதரன். அவனது கண்கள் கூர்மையாகக் குனிந்து பார்த்தன. மனதிலே இதுவரை போராடி வந்த எண்ணங்கள், நினைவுகள் எல்லாம் சட்டென்று மறைந்தன. முணுமுணுத்த அவனது உதடுகள் திடீரென 'ஆ' என்று கூவியேவிட்டன.

ஸ்லீப்பர் இரண்டு அகற்றப்பட்டிருந்தது. 'போல்ட்' இரண்டு கழற்றப்பட்டிருந்தது. 'சதி'……என்று அவன் வாய் முணுமுணுத்தது.

அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. இவ்வளவு நாளாகச் செய்துவரும் வேலைக்கு அன்று சோதனையா என்று ஒருகணம் எண்ணினான். அன்று காலையிலிருந்தே மனசு சரியாக இல்லை. வீட்டிலே போராட்டம். மாலை ஐந்து மணிக்குச் சாப்பிடாமலேயே கிளம்பி விட்டான்.

என்ன இருந்தாலும் அவன் அப்படிச் சொல்லியிருக்கக் கூடாது. 'அப்பன் வீடு, அப்பன் வீடு' என்று போய்க்கொண்டேயிருந்தால் இவனுக்குக் கொட்டியா வைத்திருக்கிறது? வருகிற சம்பளம் ஒரு வாய்ச் சோற்றுக்கே போதவில்லையே என்று ஏங்கிக்கொண்டு வாழ்க்கையை எப்படியோ தள்ளிக் கொண்டிருக்கும் அவனுடன் மனம் ஒத்து அவள் வாழவில்லையானால் கங்காதரனுக்குக் கோபம் வரத்தானே செய்யும்!

இல்வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் எல்லாம் சரியாகத்தானிருந்தாள் அவள். மூன்றுவது குழந்தையைப் பிரசவித்த பிறகு இந்த வாழ்க்கையின்மீது ஏனோ வெறுப்புத் தட்டிவிட்டது அவளுக்கு. திருப்பித் திருப்பி ஒரேவித வாழ்வு வாழப் பிடிக்கவில்லை அவன் மனைவிக்கு.

## 2

கண்ணுக்கெட்டிய தூரம்வரை மைதானமும், கள்ளி சப்பாத்திப் புதர்களும்,



மாப்பிள்ளை (வண்டிக்காரனைப் பார்த்து):—என்ன அப்பா, இது! ஆச்சரியமாயிருக்கிறதே! நான் கொடுத்த 'சார்ஜை'ப் பேசாமல் வாங்கிக் கொண்டு விட்டாயே!

வண்டிக்காரன்:—இதிலே என்ன ஆச்சரியமுங்க! உங்க மாமனார் ஐயா நீங்க ஒரு வழியாக ஊருக்குப் போனாப் போதுமின்னு அப்போதே வண்டிச் சத்தக்காசக் கொடுத்துவிட்டாரு!

எப்போதாவது 'கூ'வென்று கத்திக் கொண்டு ஓடும் ரயிலும்தான் அவள் வாழ்க்கையில் கண்டு அனுபவிக்கக்கூடிய விஷயங்கள். இதுதானா வாழ்க்கை?

அவனுடைய நல்ல குணத்துக்காக அவள் தந்தை அவளை அவனுக்குக் கட்டிக் கொடுத்தாரே யொழிய வேறு தன் மருமகன் கலெக்டர் உத்தியோகம் செய்வானென்று கொடுத்தார்? அவள் அதையும் எதிர்பார்க்கவில்லை.

பகலெல்லாம் அவன் வீட்டிலிருப்பான். இரவு லாந்தரையும் சுத்தியலையும் எடுத்துக் கொண்டு கிளம்பிவிடுவான். சில நாள் அவனுக்கு 'டியூட்டி' பத்துப் பதினைந்து மைல்களுக்கப்பால் இருக்கும். அன்று அவன் திரும்பி வரவேமாட்டான். கொட்டு கொட்டென்று வீட்டின் வராந்தாவில் உட்கார்ந்துகொண்டு வானத்து நட்சத்திரங்களை எண்ணிக்கொண்டிருப்பாள் அவள்.

இந்தத் தனிமை வாழ்வில் சோகம் தான் — சுற்றுப்புற சூன்யத்தின் சாயை தான் அவள் உள்ளத்தில் வெறுப்பு உணர்ச்சியை ஊட்டி வந்தது.

கங்காதரனுக்கு 'லைட்' வரும் நாட்களில் அவள் தன் தகப்பன் வீட்டுக்குப் போகக் கிளம்புவாள். தகராறு பிறக்கும், வளரும், முற்றும்; பின் அழியும்.

ஆனால் அன்று…அவன் சற்று நிலைமையை மீறியேதான் பேசி விட்டான். பேசியது ஒன்றும் பிரமாதமானது இல்லை. இலக்கியங்களை மீறிய வார்த்தை இல்லை. அகராதிக்குப் புறம்பான பதங்களும் இல்லை.

"'அடிக்கடி போய் தொந்திரவு கொடுக்காதே சனியனே'…என்றால் ஒரேயடியாகவே நான் போய் விடுகிறேன்… 'சனியன்! மூதேவி!' என்று இந்தக் கவரை வேண்டுமானால் திட்டுங்கள்…… இந்த ரயில் தண்டவாளத்தைத் திட்டுங்கள்……உங்களையே திட்டிக் கொள்ளுங்கள்……இந்த மூதேவி பிடித்த இடத்தில் நானிருக்க மாட்டேன்" என்றாள் படபடப்புடன். இதைக் கேட்கச் சகிக்கவில்லை அவனுக்கு.

### 3

இதுபோல் எத்தனையோ தடவை நாடகம் நடந்திருக்கிறது. தாம்பத்யப் படகை இதுபோன்ற பெரும் அலைகள் மிரட்டுவது சகஜம்தான். ஆனால் அன்று அவன் மனப்போக்கே மாறியது. "சீ… கழுதை … போகக் கூடாது … போனால் வரக்கூடாது" என்று அதட்டிவிட்டுத் தலை முண்டாசைக்கூடக் கட்டிக் கொள்ளாமல், கையில் டிபன் பாத்திரத்தையும் எடுத்துக் கொள்ளாமல் கிளம்பி விட்டான்.

ஸ்டேஷனிலிருந்து அந்தப் புகை ஏறிய லாந்தரை எடுத்துக் கொண்டான். எண்ணெய் இருக்கிறதா என்று கூடப் பார்க்கவில்லை; கிளம்பி விட்டான்.

ஒவ்வொரு 'விசிப்பராக' அடிமேல் அடி எடுத்து வைத்து நடந்து வந்து கொண்டிருந்தான். ஸ்டிரைக் அப்பொழுது ரயில்வே தண்டவாளம் ஓடும் பகுதிகளைப் பயமுறுத்திக் கொண்டிருந்தது.

'எங்கும் ஸ்டிரைக் என்பதே பேச்சு. எல்லாரும் ஸ்டிரைக் செய்வதுநிச்சயம்!' என்று எங்கும் இதே பேச்சுத் தான். ஆனால் கங்காதரனைப் போன்ற உண்மை ஊழியர்களுக்கு இதைப்பற்றிய கவலையே இல்லை. காலை எழுந்தால் தூக்கம் வரும் வரையில் ரயில்வேயின் ஞாபகம்தான்.

அவன் தகப்பனார்கூட ரயிலுக்காக வாழ்ந்து ரயிலுக்காக உழைத்து உயிர்

விட்ட பரம்பரையில் உதித்தவரல்லவா? கங்காதரன் சோடையா? எப்பொழுது நினைத்தாலும் போகிறதற்குப் பாஸ் கிடைக்கிறதே. அதற்காக வேணும் ரயில் உத்தியோகம் பார்க்கவேணும் என்று அவன் தாயார் கூறுவாளாம். காங்கிக் கூலியா யிருந்தாலென்ன, கமர்ஷியல் சூப்பிரண்டெண்டாக இருந்தாலென்ன? ரயில் உத்தியோகம் அந்தஸ்துள்ள உத்தியோகமே. குடும்பத்தில் மட்டும் இன்னும் கொஞ்சம் சௌகர்யம் நிலவி யிருந்தால்... என்று என்னென்னவோ எண்ணிக்கொண்டே நடந்து வந்து கொண்டிருந்தான் கங்காதரன். அந்தச் சிந்தனைகளுக்கு முற்றுப் புள்ளி வைத்தது போல் அந்த 'டொடக்' சப்தத்தில் ஏதோ வித்தியாசம் தட்டியது.

## 4

'ஆ' என்று கூவி வாயை மூட வில்லை. அந்தச் சிவப்பு விளக்கு கை காட்டி மரத்தில் 'டக்' என்ற சப்தம் கேட்டது. ஒரு வினாடியில் சிவப்பு விளக்கு பச்சை விளக்காக மாறியது. தூரத்தே கூவெனக் கத்தும் பாஸஞ்சரின் சப்தமும் கேட்டது.

கங்காதரனின் பரபரப்பு அதிகமாகியது. என்ன செய்வது? என்ன செய்து வண்டியை நிறுத்துவது? 'ஓ' வெனக் கூவலாமா? அந்தப் பிராந்தியத்திலே இவனுடைய குரலுக்கு எதிரொலிக்க ஆற்று நீரின் சலசலப்புக் கூட இல்லை. அதில் தண்ணீர் ஓடி ஒரு மாதமாகிறது. இவ் பரபரப்புக்குத் தகுந்தாற்போல் கையிலிருந்த லாந்தர் 'குப்' 'குப்' என்று இரண்டு முறை அடித்துக் கொண்டு, மூன்றாம் முறை அணைந்தே விட்டது. எண்ணெய் இன்றி இவ்வளவு நேரம் திரி எறிந்து அணைந்ததால் கடைசியில் உண்டான புகை இலேசாகப் பரவியது.

அதோ அந்தப் பச்சை விளக்கை மாற்றி வண்டியை நிறுத்தி விட்டால்? ஆம்... அதுதான் சரியான யோசனை... என்று அந்த லாந்தரைக் கீழே போட்டு விட்டுக் கை காட்டியை நோக்கி ஓடினான்.

## 5

மறு கணம் வண்டியும் நின்றது. ஆனால் சிறிது தூரத்தில் அகற்றப்பட்டிருந்த 'ஸ்லீப்ப'ரையும் 'போல்டை'யும் கண்டான் டிரைவர்.

இதற்குள் கார்டு, ரயில்வே போலீஸார் முதலியவர்கள் இறங்கி வந்தனர். 'சதி, சதி' என்று எல்லோருடைய


















வாயும் முணுமுணுத்தன. "கெட்டிக்கார ஆளு! கை காட்டியின் விளக்கையும் அணைத்திருக்கிறானே!" என்றான் போலீஸ்காரரில் ஒருவன்.

"அந்த விளக்கு இல்லாததால்தான் நிறுத்தினேன்" என்று சமயத்தை நழுவ விடாமல் டிரைவர் கூறினான்.

"இதோ ஆளே அகப்பட்டு விட்டான். ஐயா மாட்டிகிட்டாரு" என்று யாரோ கங்காதரனைப் பார்த்துச் சொன்னபோது தான் கங்காதரன் கண்களை விழித்துப் பார்த்தான். தான் ஒரு புதரில் விழுந்து கிடப்பதை உணர்ந்தான். மண்டையில் பொறுக்க முடியாத வலி உண்டாகியிருப்பதை உணர்ந்தான். அவனைச் சுற்றி ஒரே ரத்தக் கடலாக இருப்பதையும் பார்த்தான். அடுத்த கணம் அவன் 'தான் செய்ய நினைத்தது, பிறகு என்ன ஆயிற்று?' என்பதையெல்லாம் பரிபூரணமாக நினைவு படுத்திக்கொண்டான். இப்பொழுது அவனை ஒரு சதிகாரன் என்று கார்டு, டிரைவர் முதலானவர் பேசிக் கொண்டதையும் உணர்ந்தான். அவன் உதடுகளில் மெல்லிய புன்னகை அரும்பியது.

அதே வண்டியில் அவனைத் தூக்கிப் போட்டுக்கொண்டு போனார்கள்.

கைதியாக ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட்டான். காங்கிக் கூலியாக ரயில்வேக்கு உழைக்கும் அவன் கலாட்டாக்காரர்களுடன் சேர்ந்து நூற்றுக் கணக்கான உயிர்களை நாசமாக்கத் திட்டமிட்டதைப்பற்றியே பேச்சாக இருந்தது!

ஆஸ்பத்திரியில் பலத்த கட்டுகளுடன் படுத்துக் கொண்டிருந்தான் கங்காதரன். சாவு அவனை நெருங்கிக் கொண்டிருந்தது. உடல் சொஸ்தமான பிறகு விசாரித்துத் தண்டனையளிக்க அவன் இன்னும் கைதியாகவே இருந்தான். மரண வாக்குமூலம் எடுக்க மாஜிஸ்டிரேட் அருகே வந்து உட்கார்ந்தார்.

கங்காதரனின் கண்கள் எங்கோ கொண்டு செருகுவது போல் சுழன்றன. நிறைய சொல்ல அவன் உள்ளத்திலே வார்த்தைகள் இருந்தன. கண்ணெதிரே அமைதி வெறுத்த அவன் மனைவி கண்ணீரும் கம்பலையுமாக இடுப்பில் குழந்தையுடன் நின்றாள்.

"ஸார்... இன்று கைதியாகவே உயிர் விடுகிறேன். அதனால் பரவாயில்லை. கடமையைச் செய்தேன். கங்காதரன் கடமையைத் தவறி சதி செய்தான் 'ஸபாடாஜ்'க்குத் திட்ட மிட்டான் என்று இன்று எல்லோரும் பேசிக் கொள்வலாம். ஆனால்......காலைக்குக் கண் விழிக்க மாட்டார்களா? இன்று துரோகி என்றவர்கள் நாளைத் தியாகி என்று கூற மாட்டார்களா?

"நூற்றுக் கணக்கான உயிர்களைக் கொள்ளை கொள்ள இருந்த சதியைக் கண்டேன். மை இருட்டு. கையிலிருந்த 'அரிகேன்' விளக்கும் அணைந்தது.

"அபாயத்தைக் காட்டிக் கொண்டு நிற்கும் அந்தச் சிவப்பு விளக்கு 'டக்'கென்று பச்சை விளக்காயிற்று. வண்டி வரும் ஓசை கேட்டது. கை காட்டியை ஏற்றி பச்சையைச் சிவப்பாக்கி வண்டியை நிறுத்தி அபாயத்திலிருந்து மீட்கலாம் என எண்ணி ஏதோ ஒரு சக்தி பிடித்துத் தள்ள கிடு கிடு எனக் கைகாட்டி மரத்தின் மீது ஏறினேன்; பிடித்து உலுக்கினேன். முடியவில்லை. ஆனால் அதிலிருந்த விளக்கு அணைந்தது. சிவப்பு விளக்குமில்லை, பச்சை விளக்குமில்லை. என் முகத்தில் சந்தோஷம் நிறைந்தது. கை காட்டியில் எந்த விளக்கும் இல்லையாயிருந்தால் டிரைவரே வண்டியை நிறுத்தி விடுவார் என எண்ணித் துள்ளும் உள்ளத்துடன் இறங்கினேன். ஆனால் நான் இறங்குவதற்கும் அந்த எஞ்சின் என்னைத் தூக்கி எறிவதற்கும் சரியாக இருந்தது. நல்ல அடி. ஸ்மரணையில்லை......ஆனால் என் உயிர் பிழைத்ததா? குஞ்சும் குழந்தைகளும் நிறைந்த அந்த வண்டி பிழைத்ததா?.........நான் போகிறேன்......துரோகி என்ற குரல் என் காதில் விழுந்ததே, அதே வாய் தியாகி என்று கூறுவதை என் ஆவி கேட்கும்; என் மனைவி கேட்பாள்......"

இவ்வாறு விட்டுவிட்டுப் பெருமூச்சுடன் கூறினான் கங்காதரன்.

அவன் ஆவி பிரியும் முன்னமேயே சதி செய்த கூட்டம் கண்டு பிடிக்கப்பட்டு உடனே கங்காதரனை விடுதலை செய்ய உத்தரவும் வந்தது. ஆனால் அமைதி தவழும் முகத்துடன் கூடிய கங்காதரனின் உடலுக்குத்தான் விடுதலை......ஆனால் உயிருக்கு......?

குஞ்சு குழந்தைகளின் நூற்றுக்கணக்கான உயிர்களுக்கு விடுதலை அளிப்பதைத் தடுத்த கங்காதரனுக்கு அழியாப் புகழ் கிட்டியது.

தன் உயிரைக் கொடுத்து, பேராபத்திலிருந்து காப்பாற்றிய கங்காதரனுக்கு ரயில்வே போர்டார் நன்றி செலுத்தி அவன் குடும்பத்துக்கு ஒரு பெருந்தொகை அளித்தார்கள். அவன் மனைவி அந்தத் தொகையை எடுத்துக்கொண்டு தன் தகப்பன் வீட்டுக்குச் சென்றாள்!



# நியாயமான பொறுப்பு

என் திடத்திலும் உழைப்பிலும் எனக்கு பெருமை உண்டு. ஆனால் நாங்கள் நால்வரிருக்கும்போது எல்லா கனத்தையும் நான் ஒருவனே தாங்கிக் கொண்டு, என் முன்பக்கக் கூட்டாளிகள் சுமையில்லாமல் போவதென்றால் அது நியாயமல்லவே. சாமான்கள் ஏற்றும்போது எங்கள் நால்வர்மீதும் சரிசமமாக பாரம் விழும்படி அடுக்கினால் நாங்களும் உண்மையாக வெகுகாலம் உழைப்பது ஸாத்தியம்.




பாரத்தை பார்த்து
நிரவி ஏற்றவும்





**டன்லப்**

DCX 1073

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாஸனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளு குளுப்பையும், அமைதி சுறுசுறுப்பை அளிக்கிறது.




## டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு :

B. பாலபட்டாபி

( Estd. 1933 )

P. B. No. 182, கோயமுத்தூர்

ஸ்டாக்கிஸ்டுகள் :

சுந்தரம் ஸ்டோர்ஸ், மயிலாப்பூர்

விஜயா ஸ்டோர்ஸ் மயிலாப்பூர்

---

# கேசரியின்
## மூன்று பிரசித்த மருந்துகள்

●

## லோத்ரா

**கர்ப்பாசய ரோக நிவாரணி**

சங்காதோஷம், கீல் வாயு, தூக்கமின்மை, அஜீரணம், மலச்சிக்கல், இருமல், காசம், தலைவலி, முதுகு வலி முதலியவற்றைக் குணப்படுத்தும்.

●

## அம்ருதா

**ரத்த சுத்தி டானிக்**

ரத்த சோகை, அஜீரணம், மலச் சிக்கல், மந்தமான மூளை, பலவீனம், படபடப்பு, ஞாபகமின்மை, தெளிவற்ற கண் பார்வை, தலை சுற்றல், சரும ரோகங்கள் முதலியவற்றைக் குணப்படுத்தும்.

●

## அர்க்கா

**சிறந்த ஜுர நிவாரணி**

இன்புளுயன்ஸா, டைபாய்ட், மலேரியா, முதலான ஜுரங்கள் குணமாகும். ஈரல் குலைக் கட்டிகளும் குணமாகும்.

●

விவரங்களுக்கு எழுதுங்கள்

## கேசரி குடீரம் லிட்.

ராயப்பேட்டை - மதராஸ் - 14

REGD. No. M. 4392

தொழில்செய்யும் கைகளில் அழுக்குப்படிகின்றது...

எங்கு அழுக்கிருக்கிறதோ அங்கு கிருமிகளாலான

அபாயம் ஏற்படும்!

அடிக்கடி லைப்பாயினால் சுத்தம்

செய்துகொள்ளுங்கள்!




லைப்பாய்

சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களைக்காப்பாற்றுகிறது

L. 113-172 TM